நீங்கள் எப்பணி புரியினும் அப்பணியை நிறக்கச் செய்கிறது கோகா கோலா. பருகப் பருகத் தெவிட்டாது விறுவிறுப்பான அதன் தீஞ்சுவை. உணவு ஒரு பிடி கூடவே செல்லும், உல்லாசம் ஒரு படி மேலே துள்ளும். நீங்களும் பறப்பீர்கள் கக்ன் வெளியிலே!

புத்துணர்வூட்டிடும் அருமை, கோகா கோலாவின் பெருமை!

கோகா கோலா, கோகா கோலா கம்பெனியின் ரெஜிஸ்டர்டு டிரேடு மார்க்

எத்தருணத்திலும்

இனிமை,

கோகா-கோலாவின்

மகிமை!




CMCC-7-162-TAM

செப்டம்பர் 19ம் முதல்
வெலிங்டன்
பிரபாத்
ராக்ஸி
லிபர்ட்டி
மற்றும் தமிழகமெங்கும்

ஏவி எம்
புரொடக்ஷன்ஸ்

# அன்னையும் பிதாவும்




பாடல்கள்: கண்ணதாசன் இசை: M.S. விஸ்வநாதன்



# கல்கி

பொருளடக்கம்

சௌமிய, புரட்டாசி 6 - 1969, செப்டம்பர் 21



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

பத்திரிகைச் சுதந்திரம்
பத்திரிகைச் சுதந்திரம்
பத்திரிகைச் சுதந்திரம்
பிரகாசம் கண்ணைக் கூசுகிறது. இதுபற்றி ஏதாவது செய்தாக வேண்டும்!
தகவல் ஒலிபரப்பு இலாகா





தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்



மலர் 29 ★ இதழ் 8

# இரும்புத் திரையை நோக்கி....

**பா**ங்குகளை அரசுடைமை ஆக்கியது மக்களின் சேமிப்பில் பெருவாரியாகக் கை வைப்பதற்குச் சமம். ரூபாய் ஐம்பது கோடிக்குக் குறையாத டிபாசிட்டுகள் உள்ள பாங்கிகளைத் தான் இப்போது எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். இத்துடன் விவகாரம் முடிந்து விட்டது என்று நினைக்கக் கூடாது. இது ஓர் எச்சரிக்கை. அரசுடைமைக் கோட்பாடு வெற்றியடைவது ஒரு காலும் சாத்தியமல்ல. அதில் வெற்றி கிட்டாத காரணத்தாலேயே எப்படியேனும் வெற்றிபெற வேண்டும் என அதே வழியில் மேலும் சென்று, புதுப் புது நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கும். எல்லா விதமான சேமிப்புகளின் மீதும், எல்லாவகையான பாங்குகளின் மீதும், எல்லாவிதமான விடுமுதல்கள் மீதும் முழுமூச்சுடன் கை வைப்பதில்தான் அது கொண்டு போய் விடும். இப்போது சர்க்காருடன் போரிடுவது பயனற்றது என்று எண்ணி அரசின் வலிமைக்கு நடுத்தர வகுப்பினர் பணிந்து போனால் அப்படித்தான் நடக்கும்.

அதிக எதிர்ப்பின்றி பாங்குகள் மீது பெருந் தாக்குதல் நடந்திருக்கிறது. நடந்தது நடந்து விட்டது என்ற மனப்பான்மையினராக மக்கள் மாறி விட்டார்கள். எனவே, அடுத்த நடவடிக்கை வந்து விட்டது. தொழில்களுக்கு வேண்டிய மூலப் பொருட்கள் அனைத்தையும் அரசுதான் இறக்குமதி செய்ய வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறார்கள். அனுமதி அல்லது லைசென்ஸ் பெற்று தனிக் கம்பெனியோ அல்லது தனி நபரோ இனி அவற்றை இறக்குமதி செய்ய முடியாது. நமது வெளிநாட்டு வர்த்தக நடவடிக்கைகளில் இந்த இறக்குமதி முக்கியமான ஒரு பகுதி. இப்போது இந்த இறக்குமதி இனம் 'பெர்மிட் — லைசென்ஸ்' நிலையிலிருந்து முழு அரசாங்க ஏகபோகம் என்ற நிலைக்குப் 'பிரமோஷ'னாகி யுள்ளது. அதாவது, தேசத்தின் தனியார்த் துறையில் ஒரு முக்கியமான பகுதி தாக்குதலுக்கு உள்ளாகி உள்ளது. அனுமதி பெற்று இறக்குமதி செய்வதற்கு இருந்து வந்த கொஞ்ச நஞ்ச சுதந்திரமும் போய் விட்டது. இதைப் பற்றி 'மைனிந்தியா' பின்வருமாறு கூறுகிறது : ''அரசாங்கத்தின் வர்த்தக ஸ்தாபனங்கள் எந்த லட்சணத்தில் வேலை செய்கின்றன என்பதை, விஷயமறிந்த பலர் பொதுமக்களுக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறார்கள். அவற்றின் வரலாறு ஊழல்களின் தொடர்கதை என்று சொல்லலாம். ஒரு வகைப் பேரத்தில் பெரு நஷ்டம் ஏற்படுகிறது. மற்றொன்றில் கொள்ளை லாபம் அடித்துச் சரிக் கட்டுகிறார்கள். இதனால் வரவு செலவுக் கணக்கைச் சரிக்கட்டலாம். ஆனால் இரண்டு இனங்களிலும் நஷ்டமடைவது பொதுமக்கள்தான். தகுதியை மட்டுமே வைத்துக் கொண்டு பார்த்தால் அரசாங்க வர்த்தக கார்ப்பரேஷன், கனிப் பொருள் — உலோக வர்த்தக கார்ப்பரேஷன் ஆகியவை நடைபெறுவதற்குச் சிறிதும் நியாயமே இல்லை. அவற்றால் பெரு நஷ்டந்தான் விளைகிறது. எனினும், இப்போது மூலப் பொருட்களின் இறக்குமதி அனைத்தையும் இந்த ஸ்தாபனங்களிடமே ஒப்படைத்து அவற்றின் பணிகளை விரிவாக்குகிறார்கள்.''

இது ஒரு வர்த்தக சம்பந்தமான விஷயம் மட்டுமல்ல. தேச ஆட்சி முறையை, சர்வாதிகாரமாக மாற்றுகின்ற நடைமுறைக்கு இது மேலும் ஊக்கம் அளிக்கிறது. இதன் விளைவாக வெளி உலகுடன், குறிப்பாக ஜனநாயக நாடுகளுடன் தொடர்பில்லாதபடி இந்தியா துண்டிக்கப்பட்டு விடும். கம்யூனிஸம் என்பது பித்தலாட்டமும், மாய்மாலமும் நிறைந்தது. அதற்கு இரையாகாமல் தப்புவதற்கு நல்லறிவு தேவை. உலக மக்களிடையே பரஸ்பர அடிப்படையில், நிர்ப்பந்தமற்ற தொடர்புகள் இருப்

பது. இந்த நல்லறிவின் வளர்ச்சிக்கு அவசியம். வெளிநாட்டு வர்த்தக விஷயங்கள் மேன் மேலும் சர்க்கார் கைக்கே மாறுமாயின், அந்நியத் தொடர்புகள் துண்டிக்கப்பட்டுத் தாங்கள் தனிமையில் தவிக்க வேண்டியிருக்கிறது என்ற உணர்வு பொது மக்களுக்கு ஏற்பட்டுவிடும். தாங்கள் நிராதரவாகி விட்டதாகவும், எவ்வளவுதான் சர்க்காருடன் தங்களுக்கு மன இணக்கம் இல்லாவிடினும்கூட அதற்குப் பணிந்து கொடுத்து ஒத்துழைப்பது தவிர வேறு வழியில்லை என்றும் அவர்கள் கருத நேரிடும். கம்யூனிஸ்டு ஆட்சி முறையின் கேவலமான அம்சங்களில் ஒன்று, அந்நியத் தொடர்புக்கு அடியோடு வழியில்லாதபடி 'இரும்புத் திரை'யை உண்டாக்குவதே. அரசாங்க வர்த்தகக் கார்ப்பரேஷன், கனி-உலோக வர்த்தகக் கார்ப்பரேஷன் ஆகியவற்றின் பணிகளை விரிவாக்குவது, மேலெழுந்தவாறு பார்த்தால் தீமையற்றதாகத் தோன்றலாம். ஆனால் இந்தியாவைச் சுற்றி இரும்புத் திரை அமைக்கும் முயற்சியில் அது ஒரு பகுதியாகவே அமையும். இந்த உண்மையை 'மைலிந்தியா' பத்திரிகை எடுத்துக்காட்டியுள்ளது. பிறநாடுகளுடன் தொடர்பின்றித் தனியாக இயங்குவது மாபெரும் தீமையை விளைவிக்கும். சமாதானத்துக்கும், உலக நல்லிணக்கத்துக்கும் அது எதிரிடையானது. இத்தகைய விளைவுகள் வரலாம் என்று அரசாங்கத்தினர் உணர்ந்திருக்கிறார்களா? அல்லது இந்த நிலை வரவேண்டும் என்பதே அவர்களின் உத்தேசமா? உத்தேசித்துச் செய்தாலும் சரி, உத்தேசம் இல்லாத விளைவாக இருந்த போதிலும் சரி, அந்நிய இறக்குமதிகளை அரசாங்கத்தின் தனி ஏகபோகமாக்குவது ஜனநாயகத்தையும், உலகினரிடையே நல்லிணக்கத்தையும் முற்றிலும் பாதிக்கும் என்பதில் ஐயமில்லை.

('ஸ்வராஜ்யா'வில் ராஜாஜி எழுதியது)

# இரண்டு நீதிபதிகள்

சென்னை உயர்நீதி மன்றத்துக்கு இரு புது நீதிபதிகள் நியமிக்கப்பட்டிருப்பதில் தமிழக மக்கள் பெருமகிழ்ச்சி கொள்வார்கள்.

சென்னை நகர பஸ் ஊழியர்களுக்கும் கல்லூரி மாணவர்களுக்கும் இடையே நடைபெற்ற கலவரத்தை விசாரித்துத் தமது முடிவைச் சமர்ப்பித்த திரு பி. எஸ். சோமசுந்தரம் அவர்கள் சென்னை உயர்நீதி மன்றத்து நீதிபதியாக நியமிக்கப்பட்டிருக்கிறார். அவர் மதுரை ஜில்லாவைச் சேர்ந்தவர். கல்லூரிப் படிப்பு முடிந்த பின் சிறிது காலம் வக்கீல் தொழில் புரிந்தார். திண்டுக்கல்லில் சிறிது காலம் சர்க்கார் வக்கீலாகப் பணியாற்றினார். பிறகு முனிசிப் ஆனார். படிப் படியாக நீதித் துறையில் உத்தியோக உயர்வுகள் பெற்று வந்து இன்று சென்னை உயர்நீதி மன்ற நீதிபதிகளில் ஒருவராகி யிருக்கிறார்.

திரு எஸ். மகராஜன் அவர்கள் சென்னை உயர்நீதி மன்றத்தில் நீதிபதியாக நியமனம் பெற்றிருப்பதில் தமிழ்கூறும் நல்லுலகில் உள்ள அத்தனை தமிழ் அன்பர்களும் மகிழ்வார்கள். திருநெல்வேலியைச் சேர்ந்த திரு மகராஜனும் ஜில்லா முன்சிப் உத்தியோகத்திலிருந்து படிப்படியாக உயர்ந்து சென்னை உயர்நீதி மன்றத்துக்கு வந்திருக்கிறார்.

பிரஞ்சு நீதி முறை நிலவி வந்த புதுச்சேரியில் பிரதம நீதிபதியாக இருந்து பிரஞ்சு நீதி பரிபாலன முறையை ஆங்கிலத்தில் யாத்து அரும் பணியாற்றியிருக்கிறார். அங்கு நிலவி வந்த நீதி நிர்வாக முறையை, இந்திய முறைக்கு மிக நவீனமாக மாற்றி, அப்பகுதி மக்களின் அன்பையும் பாராட்டையும் பெற்றிருக்கிறார்.

அவர் எந்த ஊரில் இருந்தாலும் எந்தப் பதவியில் இருந்தாலும், தமிழ் இலக்கிய மணம் — பரப்பி வந்தார். ரஸிகமணி டி. கே. சி. வகுத்த இலக்கிய ரஸனை முறையைத் தமிழ் மக்களுக்கு இடையறாது நினைவு படுத்தி வந்திருக்கிறார்.

திரு மகராஜன், தமிழ் இலக்கியத்தில் மட்டுமின்றி ஆங்கில இலக்கியத்திலும் ஈடுபாடு கொண்டவர். அவர், ஷேக்ஸ்பியரின் நாடகங்களான ஹாம்லெட், லியர் மன்னன், மாக்பெத் முதலியவற்றைத் தமிழில் சிறப்பாக மொழி பெயர்த்திருக்கிறார். அவரது கம்ப ராமாயண ஆங்கில மொழி பெயர்ப்பு 'மதர் இந்தியா' என்ற அரவிந்த ஆசிரம வெளியீட்டில் தொடர்ந்து பிரசுரிக்கப்பட்டு வருகிறது.

இந்திய இலக்கிய மேதைகள் வரிசையில் கம்பரைப் பற்றி ஒரு புத்தகம் எழுதித் தரும்படி சாகித்திய அகாதெமி அவரைக் கேட்டிருக்கிறது.

இனி சென்னையில் ரஸிகமணி விதைத்த தமிழ்ப் பண்ணை செழித்தோங்கி மக்களுக்கு அறிவும் மகிழ்ச்சியும் ஊட்டப்போகிறது.

திரு மகராஜன்



திரு சோமசுந்தரம்



# ராஜாஜியின் கருத்துக்கள்

பரம ஏழைகளான மக்களுக்கு ஆசை காட்டி மதுபானக் கடைகளைச் சட்ட சம்மதமாக்கினால் அவர்கள் கள்ளுக்காகச் செலவை உயர்த்திக்கொண்டே போவார்கள். அதில் ஒரு பகுதி சர்க்காருக்குப் போகும் என்பது கணக்குப்படி சரியாயிருக்கலாம். ஆனால் இப்படி செலவிடுவதின் காரணமாக, வேறு பண்டங்களை அவர்கள் வாங்குவது குறையும். பொழுதுபோக்குக்காகச் செலவழிப்பதும் குறையும். இது காரணமாக, இவ்வினங்களில் சர்க்காரின் வருமானம் குறையும். கள், சாராயக் கடைகளுக்கு லைசென்ஸ் கொடுப்பதால் சர்க்காருக்குப் பணம் வரலாம். ஆனால் அதைவிட அதிகமான வருமானம் வேறு துறைகளில் அதற்கு நஷ்டமாகிவிடும். மக்கள் குடிக்கச் செலவழிக்கும் பணத்தில் பெரும் பகுதி மதுபானக் கடைக்கு லைசென்ஸ் பெற்றவரைப் பணக்காரனுக்கும். ஏழைக் குடும்பங்கள் மேலும் வறுமைக்கு உள்ளாகிப் பரிதாபகரமான நிலைக்குத் தாழ்ந்துவிடும். இதனால் ஏற்றத் தாழ்வுகள் அதிகமாகின்றன. சோஷலிஸ்டுக் கண்ணோட்டத்துடன் பார்த்தால் இந்நிலைமையை ஏற்க முடியாது.

கள்ளச் சரக்கு செலவாகிறது என்பதைக் காரணமாகக் காட்டி, மதுவிலக்கை எடுத்துவிட வேண்டும் என்கிறார்கள். இதிலும் கணக்குப் போட்டுப் பார்ப்பது அவசியம். இப்போது கள்ளச் சரக்கு எவ்வளவு செலவாகிறதோ அதைப் போல மிக மிகப் பன்மடங்கு மதுக் கடைகளைத் திறந்தால் செலவாகும். குடிசையில் ஒழுக்கு இருக்கிறது என்பதற்காக வெள்ள மதகையே திறந்துவிடுவது போன்ற காரியமே இது.

இருபது வருஷங்களுக்குமுன் இருந்தது போல் கள், சாராயக்கடைகளைச் சட்ட சம்மதமாக்கினால், 'குடிப்பவர்கள் நூறு: குடிக்காதவர் ஒன்று' என்ற நிலை தமிழ் நாட்டில் ஏற்பட்டு விடும். இருபது ஆண்டுகளாக மூடிக் கிடக்கும் கடைகளைத் திறக்க வேண்டாம் என்று நான் வேண்டிக் கொள்வது வெறும் 'உணர்ச்சி பூர்வமாக' மட்டும் அல்ல. முப்பத்தைந்து ஆண்டுகளுக்குமுன் சர்க்கார் முயற்சியின் மூலமாக இல்லாமல், அமைதியான முறையில் மறியல் செய்து, பல கடைகளை மூடுவதற்கு வழி செய்தோம். பின்னர் சட்டத்தின் மூலம் மதுவிலக்கை அமுலாக்கிக் கள், சாராயக் கடைகளையெல்லாம் மூடிவிட்டோம். இதன் விளைவாக ஹரிஜனங்களும், மற்ற ஏழை மக்களும் எவ்வளவு நன்மை அடைந்தார்கள் என்பதை நான் கண்ணாரக் கண்டவன். லைசென்சு கொடுத்துக் கடைகளைத் திறந்தால் ஏழை மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து குடிப்பார்கள்; அதை ஆட்சேபிக்கவோ, தடுக்கவோ துணிவு இல்லாத நிலையில் பெண்கள் இருப்பார்கள் என்பதை முன்கூட்டியே கண்டுதான் இதனை எழுதுகிறேன்.

***

இரு விஷயங்களில் ஸ்ரீ மொரார்ஜி தேசாய் வெகு தெளிவாக இருக்கிறார். ஒன்று ஸ்ரீமதி இந்திரா காந்தி அப்பட்டமான முறையில் கட்டுப்பாட்டை மீறிய குற்றத்தை இழைத்திருக்கிறார் என்பதும், அவரது அரசியல் நடத்தையில் இவ்விதமாக உள்ளவரையில் அவர் பிரதமரா யிருப்பது குறித்து ஸ்ரீ தேசாய் சமாதானம் செய்து கொள்ள முடியாது என்பதுமாகும். இரண்டாவது, ஸ்ரீமதி இந்திரா காந்திக்கு ஸ்ரீ தேசாயிடம் நம்பிக்கை இல்லையென வெளிப்படத் தெரிவதால், அவரது மந்திரி சபைக்குத் தேசாய் திரும்பிச் செல்ல முடியாதென்பது. சென்ற வாரம் சென்னை வந்திருந்தபோது மொரார்ஜி தேசாய் இவ்விரு விஷயங்களையும் நிருபர்களிடம் தெளிவுபடுத்தியிருக்கிறார். கிழிந்த காங்கிரஸ் சட்டைக்கு ஒட்டுப் போட்டு ஐக்கியம் உண்டானதாகக் காட்ட விரும்பும் நிருபர்களும் மற்றவர்களும் அவரிடம் மேலும் கேள்விகள் கேட்டும் யோசனைகள் சொல்லியும் உபத்திரவிக்க மாட்டார்கள் என நம்புவோமாக!

பரஸ்பர மரியாதை உணர்வும், நம்பிக்கையும் ஏற்படாமல் ஐக்கியம் ஏற்பட்டுவிட்டதாகச் சொல்வது உள்ளீடற்ற விஷயம். அரசியல் கொள்கையில் அக்கறையின்றித் தனி மனிதர்களிடம் மட்டுமே அக்கறை கொண்டவர்களும், பதவிப் போராட்ட

வேடிக்கையைப் பார்த்து மகிழ்பவர்களும் இவ்வித பொய் ஐக்கியத்தைத் தங்களுக்கு ஆதாயமாக்கிக் கொள்வார்கள்.

ஆனால் கட்சியின் அக்கிராசனருக்கும், பிரதமருக்கும் உள்ள அதிகாரங்கள் பற்றி இப்போது பேசப்படுகிறது. இவ்விஷயமாக என் கருத்தைத் தெளிவு படுத்துகிறேன். 'அரசியல் பதவி வகிக்க ஒரு கட்சியால் தேர்ந்தெடுக்கப்பட்டவர், அக்கட்சியின் கருவி மாத்திரமே ஆவார்; அவர் அவ்வப்போது கட்சி எடுக்கும் முடிவுகளுக்கும் அது விதிக்கும் உத்தரவுகளுக்கும்' முழுதும் கட்டுப்பட்டவர்; இவற்றுக்கு மாறாக அவர் செயலாற்றக் கூடாது' என்பது கம்யூனிஸ்ட்களின் கொள்கையும் நடைமுறையுமாகும். அக் கட்சியின் ஆட்சியில் இது சரி. ஆனால் ஜனநாயக முறைப்படி பல கட்சிகள் கலந்துகொள்ளும் சட்ட சபை ஆட்சி முறையில் இது பொருந்தாது. பார்லிமெண்ட் ஒரு மொத்தமாக எடுக்கும் முடிவுகளையே பிரதமர் பின்பற்ற வேண்டும். கடந்த 32 வருடங்களாக இதுவே என் கருத்து. பார்லிமெண்டுக்குப் பதில் சொல்ல வேண்டிய பொறுப்பை அவர் மதிக்க வேண்டும்; அது கட்டுக் குலையாமல் காக்கவேண்டும். பார்லிமெண்டின் இடத்தில் கட்சி அமர முடியாது. ஆட்சியில் உள்ள கட்சி மட்டுமின்றி மற்றக் கட்சிகளும் பங்கெடுத்துக்கொள்ளும் விவாதங்களுக்குப் பின்னர், பார்லிமெண்டின் முடிவுகள் எடுக்கப்படுகின்றன. அதன் ஸ்தானத்தை எந்தக் கட்சியும் பெற முடியாது.

இது என் கருத்தாயினும், மற்றபடி இந்திரா காந்தியின் மனப் போக்கு, அரசியல் கொள்கைகள் யாவும் தவறாக இருப்பதாகவே நான் எண்ணுகிறேன். அவை தேச நலனுக்கு உகந்தவை அல்ல. சமூக நலன், சமநீதி இவை உயர்ந்த கொள்கைகள் தாம். எல்லாக் கட்சிகளுக்கும் இவையே இலட்சியமாகும். ஆனால் இந்த இலட்சியங்களை அடைவதற்காகப் பிரதமர் தேர்ந்தெடுத்துள்ள பாதை தவறானது. அது உற்பத்தி உயர்வுக்கும், தேசச் செல்வம் பெருகவும் குந்தகம் விளைவிக்கும். ஆனால் உற்பத்தி உயர்வு, செல்வப் பெருக்கம் இவைதான் சமூக நலனுக்கு முதல் தேவைகள். இதைப் பார்லிமெண்ட் அங்கத்தினர்கள் உணர வேண்டும். அவர்களுக்கு இவ்வுண்மையை உணர்த்தச் சுதந்திரக் கட்சி தன்னால் இயன்ற தவ்வளவையும் செய்து வருகிறது. சுதந்திரக் கட்சி இப்பணியைத் தொடருவதோடு, பார்லிமெண்ட் அங்கத்தினருக்கு மட்டுமின்றி, வாக்காளர் அனைவருக்கும் இவ்வாறு நல்லறிவு நல்க வேண்டும். கொள்கையை விட்டுக் கொடுத்து விட்டு மக்களை மயக்கி அதிகாரத்தைப் பற்றுவதில் சுதந்திரக் கட்சி சிந்தனை வைக்கக் கூடாது.

***

நீதி மன்றங்களின் சுதந்திரம் என்பதே ஜனநாயகம் உறுதியாக நிற்க உதவும் அடிப்படை. சுப்ரீம் கோர்ட்டிலிருந்து தொடங்கி மூன்றாந்தர மாஜிஸ்திரேட் கோர்ட் வரையில் நீதிமன்றங்கள் யாவும் சுதந்திரமாக இருக்க வேண்டும். ஜட்ஜ்களையும் மாஜிஸ்திரேட்டுகளையும் நியமிப்பது உட்படச் சர்க்காருக்குப் பெரும் அதிகாரம் இருப்பது உண்மை. ஆனால் இது காரணமாக நியமிக்கப்படுபவர்கள் பூரண சுதந்திரத்துடன் பணி புரியத் தடையிருக்கலாகாது. தேர்மா மீட்டரை ஒருவர் செய்கிறார் என்பதனால், அவருக்கு ஜுரம் அடிக்கும்போது அது, உள்ளபடி காய்ச்சலின் தன்மையைக் காட்டாமல் அவர் விருப்பப்படியே ஜுரம் காட்ட வேண்டும் எனலாமா? அவர் தேர்மாமீட்டரைச் செய்தார் என்ற காரணத்தினால் அது இயங்குவது தம் இஷ்டப்படி இருக்க வேண்டும் என்று அவர் உரிமை பாராட்ட முடியுமா? இவ்வாறே சுப்ரீம் கோர்ட்டானது சர்க்காரின் அதிகார சக்தியால் சற்றும் பாதிக்கப்படாமல் செயலாற்ற வேண்டும்.

# ஆங்கிலத்தை ஆண்ட தமிழக அறிஞர்

கி. சாவித்திரி அம்மாள்

இவ்வாண்டு செப்டம்பர் மாதம் 22ந் தேதி அன்று மகா கனம் வி. எஸ். சீநிவாச சாஸ்திரியாரின் நூற்றாண்டு விழா நாடெங்கும் கொண்டாடப் படப் போவதை அறிவோம். அவர் பிறந்து அன்று நூறு ஆண்டுகள் பூர்த்தியாகின்றன. அவர் உயிருடன் இருந்த காலத்தில் அவரை நேரில் பார்த்துப் பழகியவர்கள் எவருக்கும் முதன் முதல் அவரது உயர்ந்த கம்பீரமான பொலிவு மிகுந்த தோற்றம் நினைவில் தோன்றாமல் இராது. நம் நாட்டுப் பண்புக்குச் சின்னமாய் விளங்கும் வேஷ்டியைச் சம்பிரதாயமாய்க் கட்டிக் கொண்டு, கோட்டும் அதன் மேல் அங்கவஸ்திரமும், தலைப் பாகையும் அணிந்த அவரது உருவப் படங்களையே நாம் எங்கும் சாதாரணமாய்க் காணலாம்.

கும்பகோணத்துக்கு அருகிலுள்ள வலங்கைமான் என்ற சிறிய கிராமத்தில் எளிய வைதிகக் குடும்பத்தில் பிறந்தவர் சாஸ்திரியார். தகப்பனார் ராமாயணம், பாகவதம், பாரதம் ஆகியவைகளைப் பிரவசனம் செய்வார். அவருக்கு மூத்த மகனாகப் பிறந்து தம் கல்வி அறிவு, நேர்மை, ஒழுக்கம் இவைகளினால் வாழ்க்கையில் மேன் மேலும் உயர்ந்து நிகரற்ற பெயரையும் புகழையும் பெற்றார். பழைய வைதிகக் கொள்கைகளில் ஊறிய, வறுமை மிகுந்த பிராமணக் குடும்பத்தில் பிறந்தவர்தான் என்றாலும், ஆங்கிலம் கற்று அதில் பேசும் திறமையில் அவருக்கு இணையில்லை என்ற புகழை இந்நாட்டில் மட்டுமல்ல மேல் நாட்டிலும் பெற்றார். ஆங்கிலத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே கேட்டு வியந்து பாராட்டும் அளவுக்கு அவரது ஆங்கிலப் பேச்சு சிறந்து விளங்கியது. அதனால் Silver Tongued orator என்று அவரை எல்லோரும் புகழ்ந்தார்கள். ஜார்ஜ் சக்கரவர்த்தி அவர் பேசியதைக் கேட்டுவிட்டு, ''எங்கள் ஆங்கில மொழி இவ்வளவு இனிமையான மொழி என்பதை இப்பொழுதுதான் அறிந்தேன்'' என்றாராம். சாஸ்திரியாருக்கு ஆங்கிலம் அந்நிய மொழி என்று தோன்றாததுடன் அதைக் கற்பதில் அதிக ஆசையும் ஆர்வமுமே உண்டாயின. எதையும் கசடறக் கற்கும் இயல்புடையவராதலால் அதன் உச்சரிப்பு, அர்த்தம் யாவையும் சரிவரத் தெரிந்து கொண்டே பேச வேண்டும்; எழுத வேண்டும் என்று கருதலானார். அதன் விளைவு கும்பகோணம் கல்லூரியில் படிக்கும் பொழுது பிரின்ஸிபால் ஹால் துரையின் பேச்சிலேயே உச்சரிப்பில் குறை கண்டு பிடித்து அதைத் தைரியமாய் அவரிடம் எடுத்துக் காட்டியதாக அவரே, ''என் வாழ்க்கையின் அம்சங்கள்'' என்ற புத்தகத்தில் எழுதினார். இலக்கியத்தில் அவருக்கு மிகுந்த ருசி உண்டு. அதனால் இலக்கிய ரசனை இல்லாமல் எழுதுவதையோ பேசுவதையோ அவரால் சிறிதும் ரசிக்க முடியாது. பிழைகள் மலிந்த பேச்சைக் கேட்க அவர் காதுகளே கூசுவது போல் நமக்குத் தோன்றும். தமிழ் பேசும் பொழுது இடையிடையே ஆங்கிலச் சொற்களைக் கலந்து பேசுவதை விரும்பாமல் அதைப் பெரிதும் குறைகூறக் கேட்டிருக்கிறேன். ஆங்கிலத்தைச் சரியாய் உச்சரிக்கும் சிரத்தையில் எப்பொழுதும் ''வெப்ஸ்டர் டிக்ஷனரி'யை மேஜை மீது வைத்திருப்பார். சிறு வயதில் தம்மைப் பிடித்த அகராதிப் பைத்தியம் கடைசி வரையிலும் தம்மைவிடவே இல்லை என்று தம்மைப் பற்றி வேடிக்கையாகச் சொல்லிக் கொள்ளுவார். கம்பீரமான தோற்றத்துக்கு மாறான நிதானமும் அடக்கமுமே அவருக்கு இயல்பாய் அமைந்திருந்தன என்று கூறலாம். உணர்ச்சிவசப்பட்டுப் பேசுவது அவர் வழக்கமல்ல. ஆனால் அதற்காக அவரை மென்மையான உணர்ச்சிகள் அற்றவர் என்று சொல்ல முடியாது. வாயால் வெளியிட்டுச் சொல்லும் பழக்கம்



மகாகனம் வி. எஸ். சீநிவாச சாஸ்திரியார்

அதிகமில்லை என்றாலும் பிறரிடமுள்ள உயர்ந்த பண்புகளை அறிந்து போற்றும் குணமுள்ளவர். அதனால் அவர் இரண்டொரு வார்த்தைகள் பேசினாலும் அப்பேச்சுகளுக்கு மதிப்பு அதிகமாகவே இருக்கும். ஆரம்பத்தில் சில வருஷங்கள் சாதாரண ஆசிரியராக இருந்தவர் பிறகு திருவல்லிக்கேணி உயர்தரப்பள்ளித் தலைமை ஆசிரியராக அமர்ந்து கல்வித் துறையில் சிறந்த பணியாற்றினார். ஒரு சாதாரணத் தலைமை ஆசிரியர் பிறகு உலகமெங்கும் போற்றிப் புகழும்படியாகப் பேர் பெற்று விளங்கினார் என்றால் அதற்கு அவரது இயல்பான நேர்மையும், பண்பும், தேச நலனில் அவருக்கிருந்த அளவுகடந்த ஆர்வமும், வாக்கு வன்மையுமே காரணங்கள் அல்லவா? ஆனால் யாவற்றையும்விட ஆசிரியராக ஆற்றும் பணியில்தான் அவருக்கு மிகுந்த ஆர்வம் இருந்தது என்று தெரிகிறது. ஏனெனில், ''பிள்ளைகளுடன் பழகி அவர்களுக்கு நல்லறிவு ஊட்டி, அவர்கள் குணங்களைப் பரிமளிக்கச் செய்து அவர்களைத் தாய்நாட்டுக்குத் தக்க மக்களாக ஆக்குவதைவிடப் புண்ணியம் வேறு உண்டா? உபாத்தியாயர் வேலைக்குக் கீழ்ப்பட்டது தான் எதுவும்'' என்று அவரே மனமுவந்து கூறியுள்ளார். காந்திஜிக்கும் அவருக்கும் கொள்கைகளில் எவ்வளவோ வேற்றுமைகள் இருந்தன. இருப்பினும் அவர்களிடையே உடன் பிறந்த சகோதரர்களுக்குள்ள ஒரு தனிப் பிரியமும் ஒற்றுமையும் இருந்தன. மாணவர்கள் அரசியலில் புகுந்து சத்தியாக்கிரகம் போன்ற தீவிர இயக்கங்களில் பங்கெடுத்துக் கொள்வது பிற்காலத்தில் நாட்டுக்குப் பெரும் பாதகம் விளைவிக்கும் என்பது சாஸ்திரியாரின் கருத்து.

அவருக்கு நம் பழைய ஆசாரங்களிலும் அனுஷ்டானங்களிலும் அதிகப் பற்றுதல் இல்லை. ஆயினும், அவைகளை அடியோடு விட்டுவிட்டவருமல்ல. சாஸ்திரியார் இங்கிலாந்து சென்றிருந்தபொழுது அவர் அன்னை மரணமடைந்தார். தாம் அருகில் இருந்து தம்மைப் பெற்ற தாயின் உடலைத் தகனம் செய்து கிருத்தியம் செய்ய முடியாமற் போனதைப் பற்றி அவர் ரொம்பவும் வருத்தமுற்றார். பிரிவாற்றாமையால் இறந்த தந்தை தசரதரை அவருக்கு மூத்த புதல்வனாகப் பிறந்தும் தாம் சம்ஸ்காரம் செய்ய முடியாமற் போயிற்றே என்று ஸ்ரீ ராமரும் இப்படித்தானே வருந்தினார்!

எளிதில் தம் உணர்ச்சிகளை வெளியிடும் பழக்கமில்லாதவரான அவர், எப். ஏ. பரீட்சையில் மாகாணத்துக்கே முதல்வராகத் தேறியதாகக் கேட்ட பொழுதுகூட தம் சந்தோஷத்தைக் காட்டாமல் அம்மா அப்பாவிடம் தெரிவிக்க எவ்வளவோ ஆவல் இருந்தும் வெகு சாதாரணமாகவே நடந்து போய்ச் சொன்னாராம்.

அவரது வாழ்க்கையையும் சிந்தனையையும் செப்பனிட்ட புத்தகங்களைப் பற்றி **Books that influenced me** என்ற தலைப்பில் அவர் பேசிய ரேடியோப் பிரசங்கத்தில் கடைசியாகத் தம் கவனத்தை முழுமையாகக் கவர்ந்த புத்தகம் ஸ்ரீமத் வால்மீகி ராமாயணமே என்று பெருமையோடு கூறிக் கொள்கிறார். எதை மறந்தாலும் அவர் கடைசியாகச் செய்த ராமாயணப் பிரசங்கங்களைக் கேட்டவர்கள் அவற்றை எவ்வாறு மறக்க இயலும்? ஸ்ரீ ராமருடைய குணநிசயங்களைப் பற்றிக் கூறும்பொழுது அவருக்கிருந்த ஆர்வம் கொஞ்ச நஞ்சமல்ல. ராமரைப் பகவானின் அவதாரம் என்று நினைப்பதைவிட உலகில் எல்லோரையும்போல் பிறந்து, கடமை, சத்தியம் தியாகம் முதலிய அரிய குணங்களின் சிறப்பினால் வாழ்க்கையில் ஏற்பட்ட எண்ணற்ற துன்பங்களையும் இன்னல்களையும் கடந்து உலகுக்கொரு வழிகாட்டியாக விளங்கினார் என்று நினைப்பதில்தான் ராமாயணத்தைப் படிப்பதின் பெரும் பயனை அடைவோம் என்பதே அவருடைய திடமான நம்பிக்கை.

ஒவ்வொரு புதன்கிழமை மாலையிலும் விடாது எட்டு மாதங்கள் தொடர்ந்து மயிலாப்பூர் சம்ஸ்கிருதக் கல்லூரி மைதானத்தில் ஆங்கிலத்திலேயே ராமாயணப் பிரசங்கங்கள் நிகழ்த்தினார். இருபத்தைந்து வருஷங்களுக்குமுன் நிகழ்ந்ததாயினும் ஒவ்வொரு நாளும் ஜனங்கள் திரண்டு வந்து கூடி ஏதோ சங்கீதக் கச்சேரியைக் கேட்பது போல் மெய்ம்மறந்து கேட்டுக் கொண்டிருந்த காட்சி — அதைப் பார்த்தவர் கேட்டவர் நினைவை விட்டு என்றும் அகலாது. ஒரு தடவை அவருக்குச் சற்று உடம்பு அசௌகரியமாயிருந்தது. அவர் இருதய பலவீனத்தை எண்ணி அன்று பிரசங்கத்தை நிறுத்திக் கொள்ளலாம் என்று சொன்ன பொழுது, ''இப்பிரசங்கங்களை எனக்குக் கிட்டிய பெரும் பேறாகக் கருதுகிறேன். நடுவில் எனக்கு ஏதாவது நேர்ந்து விட்டாலும் பெரிதல்ல'' என்று பதில் கூறியதோடு, அன்று பிரசங்கத்தை நிகழ்த்தியும் விட்டார். ஆங்கில விமரிசன முறையை அனுசரித்து ராமாயண கதாபாத்திரங்களின் குணங்களை ஆராய்ந்து நிகழ்த்திய அச் சொற்பொழிவுகள் என்றும் அழியாமல் அவர் நினைவுக்கோர் அரிய சின்னமாய் விளங்கும் என்பதில் ஐயமுண்டோ? உத்தர காண்டத்தில், கடமையே பெரிதாகக் கருதி கற்புக்கரசி சீதாதேவியை ராமர் தியாகம் செய்த போது தான் கருவுற்றிருப்பதை ராமரிடம் தெரிவிக்கும்படி லக்ஷ்மணனிடம் சீதை கேட்டுக் கொண்ட இடத்தைப் பற்றிக் கூறும்பொழுது உணர்ச்சிமேலிட்டுக் குரல் தழுதழுக்க மேலே பேச முடியாமல் அவர் நிறுத்தியதை அன்று பார்த்தவர்கள் யாரும் மறக்க முடியாது. ''உணர்ச்சி மரத்துப் போன உள்ளம் படைத்தவன்'' என்று அவர் தம்மைப் பற்றியே ஒரு பிரசங்கத்தில் கூறிக் கொண்டார். ஆனால் அதற்கு மாறாக அன்று சீதாதேவியின் நிலைமையை எண்ணி அவர் உள்ளம் உருகியதை நேரில் கண்டவர்கள் அவர் எவ்வளவு மென்மையான உணர்ச்சி படைத்தவர் என்பதை அறிந்தனர்.

நம் நாட்டுப் பண்புகள் யாவற்றுக்கும் உறைவிடமான ஒரு பெரியாரின் இந்த நூற்றாண்டு விழாவில் அவருடைய அரிய குணங்களைப் பற்றிச் சிறிது சிந்திப்பது நமக்குப் பெரும் பயனை அளிக்கும்.

# சந்தன ராணி

சோப்புகளுக்கெல்லாம்
ராணி

# கேரளா ஸாண்டல்

அது உங்களை புதிய
நறுமணமுள்ள
வசீகரமான உலகுக்கு
அழைக்கிறது

## கேரளா சந்தன சோப்

ஒரு நறுமணமுள்ள
தயாரிப்பு



SISTA'S KSO 227 TA

**கேரளா சோப்ஸ் & ஆயில்ஸ் லிட்.,**
சோப் டிவிஷன், கோழிக்கோடு-11
(கேரள அரசின் ஒரு நிறுவனம்)

# அவர் மனக்கவலையற்றிருக்க வேண்டும்...

மனித உயிர்களைக் காப்பாற்றுவது அவரது சாமர்த்தியத்தையும் ஒரே மனக்குறியுடன் வேலை செய்வதையும் பொறுத்திருக்கிறது. தன் வேலையை தங்கு தடையின்றி செய்ய அவர் மனக்கவலையற்றிருக்கவேண்டும்.

அதனால்தான் அவரைப் போன்ற சிரத்தை காட்ட வேண்டிய தொழில்களில் ஈடுபட்டவர்கள் யூகோபாங்கின் நம்பிக்கையான சேவையை நாடியுள்ளனர். அவருடைய யூகோபாங்கின் கரன்ட் அக்கவுண்ட் அவரது வாடிக்கையான பண விநியோகங்களை பாங்கின் மூலம் கொடுக்க உதவுகிறது. பாங்கிற்கு கொடுக்கும் அவரது நிரந்தரக் கட்டளைகளால் ஒரு செக் எழுதும் நேரத்தையும் கூட செலவிடாது சேமிக்கிறார். மேலும், அவர் செலுத்திய தொகைகளுக்கும் பலவித செலவுகளுக்கு எடுத்த தொகைகளுக்குமான கணக்கை பாங்க் ஒழுங்காகவும், சீராகவும் வைத்துக்கொள்கிறது.






தலைமை காரியாலயம் :
கல்கத்தா

**நீங்கள் சேமிக்கலாம்—
யூகோபாங்க் உங்களுக்கு
உதவி செய்யும்.**

ASP UCO-7/69

# கால் பந்து பற்றி வாய்ப் பந்தல்!



**சென்னை நேரு ஸ்டேடியம் பேசுகிறது :**

உலகக் கோப்பைக்கான கால் பந்தாட்டப் போட்டியின்போது ஆட்டத்தில் இருந்த அபிப்பிராய பேதம் காரணமாக ஹோண்டுராஸ் — எல் ஸால்வடார் தேசங்களுக்கிடையில் போரே மூண்டு விட்டதாம்! இரண்டு நாடுகளையும் சமாதானப்படுத்தப் பெரும் பாடு பட வேண்டியிருந்ததாம்.

உனக்கு எப்படி இந்த அரசியல் தெரிந்தது என்கிறீர்களா? 'நேரு' பெயரை வைச்சிண்டிருக்கும் எனக்கு விளையாட்டு அரசியலாவது தெரிந்திருக்க வேண்டாமா என்ன?

கால் பந்தாட்ட ரஸிகர்கள் ரொம்ப உணர்ச்சி வசப்பட்டவங்க! ரெபரியோ, ஆட்டக்காரர்களோ தவறு பண்ணினால் அவர்களாலே பொறுக்க முடியாது. சண்டைக்குப் போய்விடுவார்கள். அதனால்தான் ரஸிகர்களுக்கும் கால் பந்தாட்டக்காரர்களுக்கும் மத்தியில் முள் வேலி போட்டு நான் அவர்களைப் பிரிச்சு வைத்திருக்கிறேன்.

ஞாயிற்றுக்கிழமையன்று பெங்களூரைச் சேர்ந்த மெட்ராஸ் இன்ஜினியரிங் குழுவினருக்கும் பம்பாய் மபத்லால் கோஷ்டியினருக்கும் இறுதி ஆட்டம் நடைபெற்றது. இரண்டு கோஷ்டிகளுமே நன்றாக ஆடினாங்க. எம். ஈ. ஜி. கோல்கீப்பர் சசிதரன் உருண்டு புரண்டு பாய்ந்து குதித்துப் பல பந்துகளைக் கோலுக்குள் போகாமல் காத்தார். மபத்லால் கோஷ்டி ரொம்பச் சிரமப்பட்டு ஒரு கோல் போட்டது. அவங்க ஆட்டக்காரங்க எல்லாரும் குதியோடு குதியாக சந்தோஷத்திலே குதிக்கவிருந்தாங்க. ஆனால் ஒரு விநாடியில் ரெபரி வரதாச்சாரியார் அதைக் கோலாக ஏற்றுக் கொள்ளவில்லை. 'ஹாண்ட்ஸ்'னு அவர் சட்டம் பேசிட்டாரு! ரெபரியின் வாக்குக்கு அப்பீல் கிடையாதே! அன்றைய ஆட்டம் வெற்றி தோல்வியின்றி முடிந்தது!

செவ்வாய்க்கிழமை மறுபடியும் இருபதினாயிரம் ரஸிகர்கள் மத்தியில் இறுதி ஆட்டம் தொடர்ந்தது. அன்னிய மண்ணில் படம் பிடிக்கப் போன டைரக்டர் ஸ்ரீதர் கால் பந்தாட்ட நடிகர் முத்துராமன் பின்தொடர என் மண்ணிலே காலடி வச்சிருந்தார். சிரிப்பு நடிகர் நாகேஷ் ரொம்ப சீரியஸா கால் பந்தாட்ட இறுதியாட்டத்தைக் காண உட்கார்ந்திருந்தாரு. புதிய அட்வகேட் ஜெனரல் கோவிந்த் ஸ்வாமிநாதன் தலைமை வகித்துச் சிறப்பிக்க வந்திருந்தாரு. பம்பாய் மபத்லால் ஆட்டக்காரங்க ரொம்ப உக்கிரமா இன்றைக்கு ஆடினாங்க. ரஞ்சித் தாபா எம். ஈ. ஜி. குழுவினரை 'டபாய்'த்து, ஒரு 'கோலை'ப் போட்டு, மபத்லால் கை (அல்ல, கால்!) ஓங்கச் செய்தாரு. இதைக் கண்டு வருண பகவான் ஆனந்தக் கண்ணீரைச் சிந்தினார். கால் பந்தாட்ட ரசிகர்கள் நாற்காலிகளைக் குடையாகத் தூக்கி வைத்துக் கொண்டு ஆட்டத்தை விடாமல் கண்டு ரசித்தார்கள். மபத்லால் ஆட்டக்காரர் ரஞ்சித் தாபா மற்றொரு கோலைப் போட்டாரு. பதிலுக்கு எம். ஈ. ஜி. குழு ஒரு கோல் போட்டது.

இடை வேளைக்குப் பிறகு ஆட்டம் தொடர்ந்தபோது மபத்லால் கோஷ்டி நாலு கோல் போட்டு விட்டது. இன்று ரசிகர்களுக்குச் சிறந்த ஆட்டத்தைப் பார்த்த திருப்தி நிலவியது. 'மபத்லால் ஹிப் ஹிப் ஹுர்ரே' என்று ரசிகர்கள் முழங்க அதில் தோல்வி கண்ட கோஷ்டியினரும் பெருந்தன்மையுடன் கலந்து கொண்டு வாழ்த்தினார்கள். அட்வகேட் ஜெனரல் கோவிந்த் சுவாமிநாதன் தூக்க முடியாத அளவு பெரிசான ஷீல்டை பம்பாய் மபத்லால் குழுவினரிடம் கொடுத்தார். அவர்கள் மூன்றாவது தடவை இந்த ஷீல்டைப் பெறுகிறார்கள்.

1966ம் ஆண்டு கால் பந்தாட்டத்தில் பிரிட்டன் உலக சாம்பியனாக ஆனபோது எலிஸபெத் ராணி வெம்ளி ஸ்டேடியத்துக்கு விஜயம் செய்து போட்டியைக் கண்டு களித்தாராம். வெம்ளி ஸ்டேடியத்தில் நடைபெற்ற இந்தக் கால் பந்தாட்டப் போட்டியைப் படமெடுத்து ஒரு மணி நேரம் சென்னையில் உள்ள பிரிட்டிஷ் கவுன்சிலில் கால் பந்தாட்டக் கழகத்தினருக்கும், கால் பந்தாட்டக்காரர்களுக்கும் போட்டுக் காண்பித்தார்களாம். கால் பந்தாட்டக் கழகத் தலைவர் திரு விட்டல் இதைப் பார்த்துவிட்டு வந்து பெருமையாகச் சொல்லிக் கொண்டிருந்தாரு. எனக்கும் ஓர் ஆசை. என்னிடத்திலேயே உலகக் கால் பந்தாட்டப் போட்டி நடந்து அதிலே கலந்து கொள்ள அகில உலக ஆட்டக்காரர்களும் சென்னை விமான நிலயத்திலே வந்திறங்கணும். தனிக் குடித்தனம் நடத்தும் கிரிக்கெட் தம்பியோட ஆடறத்துக்குச் சேப்பாக்கத்துக்கு ஆஸ்திரேலியாவிலிருந்து கிரிக்கெட் கோஷ்டியினர் வரப்போகிறார்களாம். நான் ஆசைப்படறதிலே தப்பென்ன? வாயுள்ள பிள்ளைதானே பிழைக்கும்? — **குண்டுமணி**

பின்னியின் பலவித பருத்தி ஸுட்டிங் ரகங்களில் குளுமையும் இயல்பான எழிலும் இணைந்துள்ளன.

நெசவு வண்ணங்கள் எல்லாம் உங்கள் மனதிற்கு பிடித்தமாதிரி கிடைக்கின்றன.

விலைகளும் அவரவர் வசதிக்கேற்ப உள்ளதெனச் சொல்லத் தேவையில்லை

# பின்னி
# பருத்தி ஸுட்டிங்குகள்

தேர்ந்தெடுக்க:
அம்பாஸிடர் A 7781, U 7791
கான்ஸல். டபிள் ஜீரோ
கே கார்டன். ஹனுவா. பாம்கோர்ட்
பெடிக்ரி. பிளெயின்ஸ்மன்
Q 551. ராயலிஸ்ட்




உங்களுக்குத் தேவையான பின்னி துணிகளை இந்த அடையாளம் உள்ள அங்கீகாரம் பெற்ற விற்பனையாளரிடமிருந்து வாங்குங்கள்

## பின்னி-துணி உலகிலே புகழ் பெற்ற பெயர்

BY-4974



# பக்கத்து வீட்டுப் பிரமுகர்

**சமீப காலம் வரையில் திரு என். மகாலிங்கம் அவர்களின் பக்கத்து வீட்டு வாசியாக இருந்தவர், அடையாற்றிலுள்ள ராம்பால் தொழில் நிறுவனத்தின் டைரக்டர் திரு எஸ். ஆர். தாஸ் அவர்கள். ''ஏ வெரி ஃபைன் ஜென்டில்மேன்''(A very fine Gentleman) என்று திரு மகாலிங்கத்தை வர்ணிக்கும் அவர் தொடர்ந்து உணர்ச்சிப் பரவசத்துடன் பேசுகிறார் :**

நண்பர் மகாலிங்கத்தைப் பற்றி நினைக்கும் போது அவரை நல்ல மனிதர் என்று குறிப்பிடுவதா அல்லது சாதுவான மனிதர் என்று குறிப்பிடுவதா என்று தயங்குகிறேன். இந்த இரண்டு அடைமொழிகளுமே அவை சம்பிரதாயமாக ஒலிக்கும் பொருளைவிடப் பன்மடங்கு அதிக ஆழத்துடன் இவர் விஷயத்தில் பொருந்தும் என்பது என் நம்பிக்கை.

''இப்படி நாள் முழுதும் யாரோ வந்து போயிக்கிட்டே இருக்காங்க. அவங்களிடம் கொஞ்சம் கூட அலுப்புச் சலிப்பு இல்லாமல் பேசிக்கிட்டிருந்தால் உடம்பு என்னத்துக்கு ஆகும்? உடம்பைக் கவனித்துக் கொள்ளவே தெரியலியே?'' என்று இவருடைய அன்னையார் என் அன்னையாரிடமும், மனைவியிடமும் அங்கலாய்த்துக் கொள்வதை நான் பல தடவைகள் கேட்டிருக்கிறேன்!

இப்போது பரவாயில்லை. தேக நலத்தைக் கொஞ்சம் கவனித்துக் கொள்கிறார். ஒருவித 'அலர்ஜி' ஜலதோஷத்துக்காகத் தினசரி காலையில் கொஞ்சம் மருந்து எண்ணெயைத் தலையில் தேய்த்து ஊற வைத்து ஸ்நானம் செய்கிறார். ஆகாரக் கட்டுப்பாடுகளைக் கையாளுகிறார். டாக்டர்கள் இவர் உடல் நிறையைக் குறைக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார்களாம். அதற்காகக் காலையில் இலை டீ மாத்திரம் சாப்பிடுகிறார். பகலில் சப்பாத்தி. அரிசிச் சாப்பாடு கிடையாது. இரவில் பழங்கள். இதனால் பதின்மூன்று பவுண்டு எடை குறைந்து விட்டதில் இவருக்கு மகிழ்ச்சி.

இந்த நடைமுறை சமீபத்தில் நடந்த இவரது புதல்வியின் திருமணத்தை ஒட்டிச் சற்றுத் தடைப்பட்டிருக்கிறது. சீக்கிரமே அந்த ஆகார நியதியை மீண்டும் கடைப் பிடிக்கப் போவதாகச் சொல்கிறார்.

ஒவ்வொரு காரியத்தையும் அதற்கான நேரத்தில், தருணத்தில் செய்து முடிக்க வேண்டும் என்ற கொள்கையை உடையவர் நண்பர் மகாலிங்கம். இந்தக் கொள்கை பரம்பரைச் சொத்தாக வந்திருப்பது.

கல்லூரி நாட்களிலேயே இவர் அரசியல் சிந்தனைகளில் ஆர்வம் காட்டத் தொடங்கினார். அப்போது இவர் தந்தை என்ன சொன்னார் தெரியுமா? ''ஒன்று தீவிரமாக அரசியலில் இறங்கிவிடு. படிப்புப் போதும். அல்லது அரசியலைக் கொஞ்ச காலம் மறந்து கல்வியில் கவனத்தைச் செலுத்து. இரண்டையும் கலந்து குழப்பாதே'' என்று திட்டவட்டமாகச் சொன்னார். அவர் ஓர் அனுபவவாதி. காலத்தின் அருமை தெரிந்தவர். சாதாரண முறையில் வாழ்க்கையை ஆரம்பித்து நூறு பஸ்கள் ஓடும் ஸ்தாபனத்தின் அதிபரானவர்.

மகாலிங்கம் தந்தையைப் புரிந்துகொண்டார். பொறியியற் கல்வி கற்பதில் மூழ்ந்தார். படித்துப் பட்டம் பெறும்வரையில் அரசியல் ஈடுபாட்டை அப்பால் தள்ளி வைத்தார். தந்தை அடிக்கடி மகனுக்குக் கடிதங்கள் எழுதுவார். அவற்றில் 'எடுத்த காரியத்தை அதே சிந்தனையாகத் தீவிர நோக்குடன் இருந்து முடிக்க வேண்டும்' என்று வற்புறுத்துவார்.

பல தொழில் நிறுவனங்களின் அதிபராகவும் கல்வித் துறை, சமய சன்மார்க்க விஷயங்களில் ஈடுபாடு உடையவராகவும் விளங்கும்






இவர் ஒரே இடத்தில் இருப்பது என்பது முடியாத காரியம். பொதுவாகச் சொன்னால் மாதத்தில் பத்து நாட்கள் சென்னையிலும் பத்து நாட்கள் பொள்ளாச்சியிலும் பத்து நாட்கள் பிரயாணத்திலும் இவர் நேரம் போகிறது.

இவர் பிரயாணம் போகிற பாதையில் எந்தக் கார் அல்லது பஸ்ஸாக இருந்தாலும் சரி, பழுதாகி நின்றுகொண்டிருந்தால் உடனே தம் காரை நிறுத்தி, டிரைவரைப் போய் விசாரித்து வரச் சொல்லுவார். முடிந்த உதவிகளைச் செய்வார். அந்தக் கார் சரியான பிறகுதான் இவர் கார் கிளம்பும்.

ஒரு சந்தர்ப்பத்தில் இரண்டு நண்பர்களுடன் சென்னை நோக்கி வந்து கொண்டிருந்தார். செங்கல்பட்டு அருகே ஒரு பஸ் பழுதடைந்து நின்றுகொண்டிருந்தது. அதைச் சரிபார்த்துக் கொண்டிருந்தார்கள். அது புறப்பட இன்னும் சற்று நேரம் பிடிக்கும்போலிருந்தது.

இவர் காரை நிறுத்தச் செய்தார். ''அவசரமாகப் போக வேண்டியிருந்தால் மூன்று பேர் என் கூடக் காரில் வரலாம்'' என்று அழைத்தார். மூன்று நபர்கள் அந்த வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார்கள். தாம் வீட்டில் இறங்கிக் கொண்டதும் அந்த மூவரையும் அவரவர் ஜாகைக்குக் கொண்டுபோய் விட்டு வரும்படி பணித்தார். இது அவருடைய சுபாவம். மைசூர் பிராந்தியத்தில் ஒரு தடவை ஒரு லாரி ஓட்டி, பெண் ஒருத்தியை மோதித் தள்ளிவிட்டுத் திரும்பிப் பாராமல் போய்விட்டான். சற்று நேரம் கழித்து அதே பாதையில் வந்த இவர், அந்தப் பெண்ணை ஆஸ்பத்திரிக்கு எடுத்துப் போய்க் கவனிக்கச் செய்தார். தேவையான மற்ற உதவிகளையும் புரிந்தார். ஒரு நாள் முழுதும் தமது காரியங்கள் இதனால் பாதிக்கப்பட்டதையும் பொருட்படுத்தாமல் வந்தார்.

இவருக்குப் பொழுதுபோக்கு புத்தகங்கள் படிப்பது. சரித்திரமோ, நவீனமோ, விஞ்ஞானமோ ஆங்கிலத்தில் இருந்தாலும் சரி, தமிழில் இருந்தாலும் சரி, விரும்பிப் படிப்பார். நிறையவும் படிப்பார். கார், விமானம், ரயில் எந்தப் பிரயாணமாக இருந்தாலும் இவர் கூட நிறையப் புத்தகங்கள் பிரயாணம் செய்யும். பிரயாணம் இல்லாத நாட்களில் இரவில் இரண்டு மணி நேரம் எப்படியாவது படிப்பது என்ற வழக்கம் இவரிடம் உண்டு.

நல்ல புத்தகங்களை எங்கிருந்தாலும், எந்த விலைக்கும் வாங்கிவிடுவார். அவைகளைப் படித்து முடித்த பிறகு, குறிப்புகளுடன் தம் நண்பர்கள் சிலருக்கும் அனுப்பி வைப்பார். தாம் ரசித்த சில புத்தகங்களை அவர்களும் படித்து மகிழ்வதில் அவருக்குத் திருப்தி. சில நாட்களுக்கு முன் சென்னை திரைப் படக் கொட்டகை ஒன்றில் 'டாக்டர் ஷிவாகோ' படம் திரையிடப்பட்டபோது இவர், பாஸ்டர்நாக்கின் மூலக் கதையைப் படிக்க விரும்பினார். ஆனால் அப்போது சென்னையில் அந்தப் புத்தகத்தின் பிரதி கிடைக்கவில்லை. உடனடியாகத் தில்லிக்குத் தகவல் கொடுத்து அங்கிருந்து புத்தகத்தை வரவழைத்துப் படித்தார்.

சமயத் துறையில் இவருக்கு ஈடுபாடு அதிகம். வள்ளலார் காட்டிய வழியில் நிறைந்த பற்றுதல். வள்ளலார் உபதேசம் பகுத்தறிவை அடிப்படையாகக் கொண்டது மாத்திரமல்ல. வேதங்களையும் உபநிஷத்துக்களையும் விஞ்ஞானபூர்வமாக அடிப்படையாகக் கொண்ட தத்துவம் என்று நினைப்பவர். வள்ளலாரை ஏசுபிரானுடனும் நபிகள் நாயகத்துடனும், புத்தருடனும், காந்தியுடனும் ஒப்பிட்டு ஆராய்ச்சிப் பிரசங்கங்கள் செய்யும் கோவை கிரிதாரி பிரசாத் இவருடைய இருபத்தைந்து ஆண்டு கால நண்பர்.

ஒரு சமயம் இவர் நண்பர்கள் இருவருடன் வள்ளலார் விழாவில் பங்கெடுத்துக் கொள்ள மாயூரம் போயிருந்தார். அங்கு போனவுடன் சாதாரண ஹோட்டல் அறையில் நண்பர்களுடன் தங்கினர். ஹோட்டல் பொதுக் குழாயில் ஸ்நானத்துக்காக 'க்யூ'வில் நின்றார். இவர் வந்திருப்பதைக் கேள்விப்பட்டு அருகிலிருந்த ஆதீனகர்த்தர் ஒருவர் வசதியாக ஜாகை ஏற்பாடு செய்து இவரை அழைத்துப் போக ஆள் அனுப்பினார். மாயூரத்திலிருந்த நண்பர்களும் இவரைத் தங்கள் இல்லத்துக்கு அழைத்தனர். இவர் சம்மதிக்கவில்லை. 'என் அந்தஸ்தைக் காண்பித்துக் கொள்ளவும், சௌகரியங்களை நாடியும் நான் இங்கே வரவில்லை. வள்ளலார் விழாவில் பங்கு பெறத்தான் வந்திருக்கிறேன். ஹோட்டல் அறை சௌகரியமாகவே இருக்கிறது.' என்று சொல்லிவிட்டு ஊர் திரும்பும்வரை அங்கேயேதான் இருந்தார்.

அடிக்கடி வெளி நாடுகள் போகும் பழக்கமும் உண்டு. ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் பலரகத் தொழிற்சாலைகளைப் பார்வையிடுவார். ''அங்கெல்லாம், வேலை செய்கிற தொழிலாளிகளைத்தான் பார்க்க முடிகிறதே ஒழிய, அவர்களை வேலை வாங்கும் 'சூப்பர்வைஸர்களை'ப் பார்க்க முடிவதில்லை. நம் நாட்டு நிலை இதற்கு முற்றிலும் மாறுபாடு. இங்கே தொழிலாளர்களை விட 'சூபர்வைஸர்' தான் அதிகம்'' என்பார்.

முன்பெல்லாம் ஹிந்தி, ஆங்கிலத் திரைப் படங்களை விரும்பிப் பார்ப்பார். பிறகு கொஞ்ச நாட்கள் ஆங்கிலப் படங்களைப் பார்த்து வந்தார். இப்போது அதற்குக்கூட அவகாசம் கிடைப்பதில்லை.

'எங்கு போயிருந்தாலும், எத்தனை நீண்ட பிரயாணமாக இருந்தாலும் ஊருக்குத் திரும்பியவுடன் அலுவலகத்துக்கு வந்துவிட வேண்டும். ஓய்வு என்ற பேச்சு அப்புறம்தான்' என்று இவர் தகப்பனார் தம் சிப்பந்திகளிடம் சொல்லுவாராம்!

அந்த வார்த்தைகளை இவரும் தம் மனத்தில் நன்கு பதிய வைத்துக் கொண்டிருக்கிறார்.

பேட்டி: **கோமதி ஸ்வாமிநாதன்**

# ராமாயணம்

ராஜாஜி

## 27. கங்கையைத் தாண்டினர்

தமஸா நதிக் கரையில் படுத்து உறங்கின அயோத்தி நகரவாசிகள் காலையில் எழுந்து பார்த்தார்கள். ராமனையும் தேரையும் காணாமல் பிரமித்து இங்குமங்கும் தேடிப் பார்த்துத் தேர்ச் சக்கரத்தின் சுவட்டைப் பின் பற்றிப் போய் மறுபடியும் அயோத்திக்குப் போகும் வழியோடு அது கலந்து போனதைக் கண்டு ஏமாற்றமடைந்தார்கள். நகரத்துக்குத் திரும்பித் தத்தம் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். கைகேயியை பலவாறாக நிந்தித்துத் திருப்தியடையப் பார்த்தார்கள். ராமனை இழந்த நகரம் அழகை இழந்து துயரத்தில் மூழ்கிற்று.

* * *

விடிவதற்கு முன்னமே புறப்பட்டுப் போன ரதம் வனத்தில் வெகு தூரம் சென்று விட்டது. பல நதிகளைக் கடந்து கோசல தேசத்தின் மேற்கு எல்லையை நோக்கிச் சென்றார்கள்; ராமன் சுமந்திரனோடு பேசிக் கொண்டே போனான். ''நான் மறுபடியும் சரயூநதிக் கரை வனத்தில் என்று வேட்டையாடுவேன்? வேட்டையாடுவது சரியா? ஓரளவுதான் அத்தகைய காரியங்களில் அரச குமாரர்கள் ஈடுபட வேண்டும். அளவுக்கு மிஞ்சிப் போனால் அது கெட்ட வழக்கமாகும்.''

இம்மாதிரிப் பொழுதுபோக்காகப் பல விஷயங்கள் பேசிக் கொண்டே அவர்கள் சென்றார்கள்.

கோசல நாட்டின் தென் எல்லையைச் சேர்ந்ததும் ராமன் தேரை நிறுத்தி அயோத்தி நகரத்தை, திசை நோக்கி வணங்கினான்.

''நகரங்களுக்குள் மாணிக்கமே! இக்ஷ்வாகு வம்சத்தின் தலைநகரமே! என் வனவாச விரதம் முடிந்து தந்தை தாய்களையும் உன்னையும் மறுபடியும் தரிசிப்பேனா? நீ அந்தச் சந்தோஷத்தை எனக்குத் தர வேண்டும்'' என்று பிரார்த்தனை செலுத்தினான்.



தேர் கங்கை நதிக்கரையை அடைந்தது. நதியின் அபார அழகை அநுபவித்துக் கொண்டே சென்றார்கள். மிக ரம்மியமான ஓர் இடத்தைக் கண்டதும் ராமன், ''இவ்விடம் இன்று இரவு தங்கலாம்'' என்றான்.

குதிரைகளை அவிழ்த்து விட்டு ஒரு மரத்தடியில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அந்தப் பிரதேசத்துக்கு அதிபதி குகன். ராமன் வருவான் என்பதைத் தன்னுடைய ஆட்களால் முன்னாலே அறிந்த குகன் தன் பரிவாரங்களுடன் ராம லக்ஷ்மணர்களைத் தரிசிக்க வந்தான்.

குகன் ராமனிடம் அபார அன்பு கொண்டவன். கங்கைக் கரை நிஷாதர்களுக்குத் தலைவன். மிகவும் செல்வாக்கும் புகழும் பெற்ற ஸ்தலபதி. தூரத்தில் வரும் போதே குகனைப் பார்த்துச் சக்கரவர்த்தித் திருமகனும் லக்ஷ்மணனும் எழுந்து அவனிடம் சென்றார்கள். குகன் ராமனை ஆலிங்கனம் செய்து வரவேற்றான்.

''இந்தத் தேசம் உனதாகவே வைத்துக் கொள்வாய். அயோத்தி எப்படியோ அப்படியே இதுவும் உன்னுடையதாகும். இத்தகைய அதிதி எவனுக்குக் கிடைப்பான்? இது என் பாக்கியம்'' என்றான் குகன்.

குகனுடைய உபசாரம் அபாரமாக இருந்தது. அவனுடைய ஆட்கள் பலவித உணவுப் பதார்த்தங்களும் பணியாரங்களும் கொண்டு வந்து வைத்தார்கள். ''என் ராஜ்யத்தில் நீ சுகமாக இருக்கலாம். பதினான்கு வருஷங்களும் கழிக்கலாம். ஒன்றும் குறைவு இருக்காது. உன்னை உபசரிப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும். அருள்வாய்!'' என்றான்.

ராமன் அவனை இறுகத் தழுவி, ''அப்பனே! உன் அன்பு எனக்குத் தெரியும். உன் உபசாரத்தை இங்கே பெற்றேன். அதற்கு மேல் நான் விரதத்தால் கட்டுப்பட்டு நிற்கிறேன். வனவாசம் செய்ய வந்திருக்கிறேன் அல்லவா? இதோ இந்தக் குதிரைகள், என் தந்தைக்கு இவை மிகப் பிரியமான குதிரைகள். அவற்றுக்கு நல்ல தீனி ஏற்பாடு செய்வாய். நாங்கள்

வனவாசத்துக்குரிய உணவைப் புசித்துப் படுக்கிறோம்'' என்றான்.

அன்று அந்த மரத்தடியில் ராமனும் சீதையும் தங்கினார்கள். லக்ஷ்மணன், குகனுடனும் சுமந்திரனுடனும் பேசிக் கொண்டே அன்று இரவும் தூங்காமலே கழித்தான்.

குகன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான்:

''அப்பனே! நீ படுத்துத் தூங்குவாய். அதோ உனக்கு இடம் சரியாகப் பண்ணி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த வனத்தில் என்னையறியாமல் யாரும் ஏதும் செய்ய முடியாது. என்னுடைய ஆட்கள் மிகக் கவனமாகக் காவல் இருக்கிறார்கள். ராமனைப் பற்றிக் கவலையோ பயமோ வேண்டியதில்லை. தூங்குவாய்.''

இதைக் கேட்டு லக்ஷ்மணன், ''குகனே! எனக்குத் தூக்கம் வரவில்லை. அதோ சீதை, ஜனக மகாராஜனின் மகள், தசரத சக்கரவர்த்தியின் மருமகள், தரையில் படுத்திருக்கிறாள். மூன்று உலகமும் யுத்தம் செய்து வசமாக்கிக் கொள்ளும் சக்தி வாய்ந்த புருஷோத்தமன் புல் தரையின் மேல் படுத்துக் கிடக்கிறான். இதைப் பார்த்தும் எனக்கு எப்படித் தூக்கம் வரும்?'' என்றான்.

''ராமனை வனத்துக்கு அனுப்பிவிட்ட அயோத்தி நகரம் எவ்வாறு பிழைக்கும்? அரண்மனை அந்தப்புரம் அழுகுரலால் நிரம்பும். கௌசல்யையும் என் தாயும் இப்போது உயிருடன் இருக்கிறார்களோ, உயிர் நீத்தார்களோ எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. 'வனம் போ' என்று தந்தை எளிதில் சொல்லி விட்டாரே யொழிய ராமனை அனுப்பிவிட்டபின் அவர் உயிர் வைத்திருப்பது சந்தேகம். அவர் இறந்தால் பிறகு எங்கள் தாய்மார்களின் கதியும் அதுவே. அந்திமக் கடன் செய்வதற்குக்கூட நாங்கள் கொடுத்து வைக்கவில்லை. எங்களுடைய வனவாச விரதம் முடிந்து நாங்கள் திரும்பி ஊர் போய்ச் சேரும் போது, தந்தையும் தாய்மார்களும் உயிருடனிருந்து சந்தோஷப்படுவார்களா என்பது எனக்கு மிகவும் சந்தேகமாகத்தான் இருக்கிறது'' என்றான்.

இப்படித் துயரம் நிறைந்த மொழிகளை மனமுருகிப் பேசினான் லக்ஷ்மணன். லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட குகனும் கண்ணீர் விட்டான். இரவெல்லாம் இவ்வாறு பேசிக் கொண்டு கழித்தார்கள்.

அதிகாலையில் ராமன் எழுந்து லக்ஷ்மணனுக்குச் சொன்னான்:

''நதியைத் தாண்டிப் போக வேண்டும். குகனுக்குச் சொல்லி இந்த அகலமான நதியைக் கடப்பதற்குப் பெரிய ஓடம் ஏற்பாடு செய்யும்படி சொல்லுவாய்!'' என்றான்.

அவ்வாறே குகனும் தன் காரியஸ்தர்களுக்குச் சொல்லி ஒரு நல்ல ஓடத்தை அமைத்து ராமனுக்குத் தெரிவித்தான். ஆயுதபாணிகளாக ராமலக்ஷ்மணர்களும் சீதையும் நதியை நோக்கிச் சென்றார்கள்.

சுமந்திரன் ராமனை வணங்கி, ''இனி நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

ராமன் சுமந்திரன் தோளின் மேல் கையை வைத்து, ''சுமந்திரரே, சீக்கிரம் அயோத்தி திரும்பிச் செல்வீர். அரசன் பக்கத்தில் இருப்பீர். அவரை நன்றாகப் பார்த்துக் கொள்வீர்'' என்றான்.

''உலகத்தில் சீலம், அத்தியயனம், நல்ல நடத்தை இவையெல்லாம் ஒரு பயனும் இல்லை என்பதை இப்போது அறிந்தேன். நீயும் தம்பியும் வைதேகியுடன் வனத்தில் வசிக்கப் போகிறீர்களே! எங்களுக்கு இனி என்ன கதி? கைகேயி ஆட்சியில் நாங்கள் எப்படிப் பிழைப்போம்?'' என்று சொல்லிச் சுமந்திரன் குழந்தை போல் உரக்க அழுதான்.

ராமன் அவன் கண்களைத் துடைத்து, ''எங்கள் குலத்துக்கு உத்தமமான நண்பர் உம்மைப் போல் வேறு யாரும் இல்லை. தந்தை துக்கம் அடையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உம்முடைய கடமை. மனம் உடைந்து போயிருக்கிறார். அவர் என்ன சொன்னாலும் அது சரியா அல்லது கைகேயியைத் திருப்தி செய்வதற்காகச் சொல்கிறாரா என்று விசாரியாமல் அவர் சொன்னபடி செய்து, அவருடைய மனத்தில் கஷ்டம் உண்டாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். வனத்தில் இருக்கும் எங்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நாங்கள் பதினான்கு வருஷம் சுலபமாகக் கழித்துத் திரும்பி வந்து விடுகிறோம் என்று நான் சொன்னதாக அரசனிடமும் எல்லோரிடமும் சொல்ல வேண்டும். பரதனைச் சீக்கிரம் தருவித்து அரச பதவியில் அமர்த்தி எங்கள் அன்பைச் சொல்லி, பெரிய அன்னைகள் இருவரையும் தன்னைப் பெற்ற தாய் கைகேயியைப் போலவே பார்த்துக் கொள்ளச் சொல்ல வேண்டும்'' என்றான்.

இவ்வாறு ராமன் சொன்னான். ஆனாலும் சுமந்திரன் துக்கம் தாளாமல் அழுதான்.

(தொடரும்)

# பிரிட்டானியா
# கஸ்டர்ட் க்ரீம்
பிஸ்கட்டுகள்

க்ரீமுடன்
மொரமொரப்பு

பிரிட்டானியா கஸ்டர்ட்
க்ரீம் பிஸ்கட்டுகள்
சாப்பிடுவதற்கு
அருமையானவை.
க்ரீம், மொரமொரப்பு,
இன்சுவை எல்லாம்
நிறைந்து இருக்கும்.
உங்கள் குடும்பத்தை
எல்லாவிதத்திலும்
குதூகலத்தில் ஆழ்த்த
இன்றே ஒரு பாக்கெட்
வாங்குங்கள்.







என்றாலே உயர்தரம்

BBC-8873

# 'இப்பொழுது என்னுடைய தெம்பையும் சுறுசுறுப்பையும் பார்த்து எல்லாரும் ஆச்சரியப்படுகிறார்கள்!'



ஆனால், சில மாதங்களுக்கு முன் எனக்கு எப்பொழுதும் தள்ளாமை. வேலையே ஓடாது. கடைசியில் நான் ஒரு டாக்டரைப் பார்த்தேன்.



டாக்டர் சொன்னார்: 'உங்களுக்குப் போதிய அளவு போஷாக்கு கிடைக்காத குறைதான். ஹார்லிக்ஸ் சாப்பிடுங்கள்.'

ஹார்லிக்ஸ் சாப்பிடத் தொடங்கிய பின் நான் சுறுசுறுப்பாக வேலை செய்வதைப் பார்த்து எல்லாரும் ஆச்சரியப்படுகிறார்கள்.



**ஹார்லிக்ஸ்**
அருந்திய பின் நான் தெம்புடன் திகழ்கிறேன்!

போஷணைக் குறைவினால் சோர்வும் மந்தமும் ஏற்படுகின்றன. சரியாக வேலை செய்ய முடியாமல் போகிறது. சில சமயங்களில் வேலையை இழக்கவும் நேரிடுகிறது. இதற்குப் பரிகாரமாக டாக்டர்கள் ஹார்லிக்ஸ் சிபார்சு செய்கிறார்கள். ஹார்லிக்ஸ் இழந்த சக்தியை மீட்டளித்து வலுவையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது.




## ஹார்லிக்ஸ் அதிக சக்தியை அளிக்கிறது!

HL 7



# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் ஐம்பது

## "ஆபத்துதவிகள்"

இளவரசரைப் படகிலே பார்த்ததும் பார்த்திபேந்திரனுக்கு உண்டான ஆச்சரியம் சொல்லத் தரமன்று. கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்து தரிசனம் தந்ததுமல்லாமல், "வேண்டிய வரங்களைக் கேள்" என்று சொன்னது போலல்லவா இருக்கிறது? எனினும், இப்படி அவர் தனியாகப் படகில் வருவதன் காரணம் என்ன? பழுவேட்டரையர்களின் கப்பல்கள் என்ன ஆயின?... தன்னுடைய கப்பல் இது என்று தெரியாமல், ஒரு வேளை இதுதான் அவரைச் சிறைப்படுத்த வந்த கப்பல் என்று எண்ணிக் கொண்டு வருகிறாரோ?

அப்படியெல்லாம் தவறான எண்ணத்தில் வரவில்லை என்று விரைவிலேயே தெரிந்து போயிற்று. படகிலிருந்து கப்பலில் இளவரசர் ஏறியதும் பார்த்திபேந்திரன் கேட்கும் வரையில் காத்திராமல் நடந்த சம்பவங்களைச் சுருக்கமாகக் கூறி விட்டார். "அராபியர் வசப்பட்ட கப்பலில் வந்தியத்தேவன் இருக்கிறான். அவனை எப்படியாவது தப்புவித்தாக வேண்டும்" என்றார்.

இளவரசர் கூறிய செய்திகள் பார்த்திபேந்திரனுக்கு மிக்க குதூகலத்தை உண்டாக்கின.

"எல்லாம் நன்றாகத்தான் முடிந்திருக்கின்றன. அந்த முரட்டுப் பிள்ளை இவ்வளவு பதற்றமாகக் காரியம் செய்யாதிருந்தால் இன்னும் நன்றாயிருந்திருக்கும். ஆயினும் அவனை அயல்நாட்டாரிடம் காட்டிக் கொடுத்துவிடக்கூடாது. அந்தக் கப்பல் வெகுதூரம் போயிருக்க முடியாது. எப்படியும் துரத்திப் பிடித்து விடலாம்" என்றான்.

பிறகு கலபதியைக் கூப்பிட்டு விவரத்தைக் கூறினான்.

"அதைப் பற்றி என்ன கவலை? காற்று இப்படியே அநுகூலமாக அடித்துக் கொண்டிருந்தால் சாயங்காலத்துக்குள் பிடித்து விடலாம்! நம்மைத் தப்பி அந்தக் கப்பல் எங்கே போய்விடப் போகிறது? கோடிக்கரை சென்று பிறகு கடற்கரையோரமாகத்தானே போக வேண்டும்?" என்றான் கலபதி.

ஆனால் வாயு பகவானுடைய திருவுள்ளம் வேறுவிதமாயிருந்தது. வரவரக் காற்றின் வேகம் குறைந்து வந்தது. உச்சிவேளை ஆனதும் காற்று அடியோடு நின்று விட்டது. கடல் அலை என்பதே இன்றி அமைதி யடைந்திருந்தது. சொல்ல முடியாத புழுக்கம் சூழ்ந்தது. சூரிய பகவான் வானத்தில் ஜோதிப் பிழம்பாக விளங்கிக் கடல் மீது தீயைப் பொழிந்தார். கடல் நீர்

தொட்டுப் பார்த்தால் சுட்டிராதுதான். ஆயினும் கடலைப் பார்க்கும்போது தண்ணீர்க் கடலாகத் தோன்றவில்லை; நன்றாகக் காய்ச்சிக் கொதித்துப் புகை எழும்பும் எண்ணெய்க் கடல் போலத் தோன்றியது. சூரிய கிரணங்கள் நேரே பிரதிபலித்த இடங்களில் உருக்கிய அக்கினிக் கடலாகவும் காணப்பட்டது.

கப்பல் அசையவில்லை. பாய் மரங்களிலிருந்து எல்லாப் பாய்களும் நன்றாக விரிக்கப்பட்டிருந்தன. பயன் என்ன? அலைஓசை நின்றதுபோல் பாய்மரங்கள் சடபடவென்று அடித்துக் கொள்ளும் ஓசையும் நின்று விட்டது. பாய்மரங்களும் தூண்களும் குறுக்கு விட்டங்களும் அசையும்போது ஏற்படும் கறமுற சத்தமும் இல்லை. கப்பல் கடலைக் கிழித்துச் செல்லும் ஓசையும் இல்லை. உண்மையில் அந்த நிசப்தம் சகிக்க முடியாத வேதனையை அளித்தது.

அத்துடன் இளவரசரின் உள்ளத்தில் வந்தியத்தேவனைப் பற்றிய வேதனையும் மிகுந்தது. "இப்படிக் காற்று நின்று கப்பலும் அடியோடு நின்றுவிட்டதே! இப்படியே எத்தனை நேரம் இருக்கும்? காற்று எப்போது மறுபடியும் வரும்? அந்தக் கப்பல் தப்பித்துக் கொண்டுபோய் விடாதா?" என்று கவலையுடன் கேட்டார்.

பார்த்திபேந்திரன் நாவாயின் நாயகனை நோக்கினான்.

அப்போது கலபதி, "அதிக நேரம் இப்படியே காற்று அடியோடு ஓய்ந்து இருக்க முடியாது. சுழிக் காற்று எங்கேயோ உருவாகிக் கொண்டிருக்கிறது. சீக்கிரத்தில் அது வந்து நம்மைத் தாக்கினாலும் தாக்கும்; அல்லது நம்மை ஒதுக்கி விட்டு விட்டு அப்பால் போனாலும் போய்விடும். நம்மைச் சுழிக் காற்று தாக்கினாலும் தாக்காவிட்டாலும் கடல் சீக்கிரத்தில் கொந்தளிக்கப் போவது நிச்சயம். இப்போது இவ்வளவு அமைதி குடிகொண்டிருக்கிறதல்லவா? இன்று இரவுக்குள் மலை போன்ற அலைகள் எழுந்து மோதுவதைப் பார்ப்போம். மலைகளையும் பார்ப்போம்; அதல பாதாளத்தையும் பார்ப்போம்!" என்றான்.

"சுழிக்காற்று கப்பலைத் தாக்கினால் அபாயந்தான் அல்லவா?"

"சாதாரண அபாயமா? கடவுள் காப்பாற்றினால்தான் உண்டு!"

"அப்படியானால் அந்தக் கப்பலை நாம் பிடிப்பது துர்லபம்."

"இளவரசே! கடலும் காற்றும் பட்சபாதம் காட்டுவதில்லை. நமக்கு ஏற்பட்டிருக்கும் நிலைமைதான் அந்தக் கப்பலுக்கும் ஏற்பட்டிருக்கும். தற்சமயம் அதுவும் அசையாமல்தான் நிற்கும்.."

"ஒரு வேளை கரையோரம் சென்றிருந்தால்...?" என்று இளவரசர் கேட்டார்.

"கரையோரம் போயிருந்தால் அதில் உள்ளவர்கள் இறங்கிக் கரை சேர்ந்து தப்பிக்கலாம்! ஆனால் கப்பல் போனதுதான்!" என்று சொன்னான் கலபதி.

"எவ்வளவு பெரிய அபாயமாயிருந்தாலும் நமக்கு வேண்டியவர்கள் நம் பக்கத்தில் இருந்தால் கவலையில்லை!" என்றார் இளவரசர். அவருடைய மனக்கண் முன்னால் வந்தியத்தேவனுடைய குதூகலம் ததும்பும் முகமும் பூங்குழலியின் மிரண்ட பார்வையுடைய முகமும் அடிக்கடி வந்து கொண்டிருந்தன. அவர்கள் இச்சமயம் எங்கே இருப்பார்கள்? என்ன செய்து கொண்டிருப்பார்கள்? என்ன எண்ணிக் கொண்டிருப்பார்கள்?



* * *

உண்மையிலேயே அபாயம் சூழ்ந்த நிலையில் நாம் விட்டுவிட்டு வந்த வந்தியத்தேவனிடம் இப்போது நாம் செல்வோம்.

இளவரசரைச் சிறைப் பிடித்துக் கொண்டு போவதற்காக வந்த பெரிய மரக்கலத்தின் அடித்தட்டில், தட்டு முட்டுச் சாமான்களும் மரக் கட்டைகளும் மூட்டை முடிச்சுகளும் போட்டிருந்த இருண்ட அறையில், அவன் ஒரு கட்டையுடன் சேர்த்துக் கட்டப்பட்டுக் கிடந்தான். வெகுநேரம் வரையில் அவன் பிரமை பிடித்தவன் போலிருந்தான். அவசர புத்தியினால் இத்தகைய இக்கட்டில் அகப்பட்டுக் கொண்டோமே என்ற எண்ணம் அவனை வதைத்தது. இது என்ன கப்பல், யாருடைய கப்பல், இதில் சில முரட்டு அராபியர்களும் மந்திரவாதி ரவிதாஸனும் சேர்ந்திருப்பது எப்படி. இந்தக் கப்பல் எங்கே போகிறது, தன்னை என்னதான் செய்வார்கள் என்று



யோசித்து யோசித்துப் பார்த்தும் அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் தன் வருங்காலத்தைப் பற்றிக் கண்டு வந்த கனவெல்லாம் உண்மையில் கனவு தான் போலும்! இதைவிடப் பெரிய கஷ்டங்களிலிருந்தெல்லாம் தான் தப்பித்திருக்கும்போது இதிலிருந்து தப்பிக்கவும் ஒரு வழி கிடைக்காமலா போகும் என்ற சபலமும் சிலசமயம் ஏற்பட்டது. பார்க்கலாம்; உடம்பில் உயிர் இருக்கும் வரையில், அறிவும் ஆலோசனைத் திறனும் இருக்கும் வரையில், அடியோடு நம்பிக்கை இழக்க வேண்டியதில்லை.

இந்த ஆசை தோன்றிய பிறகு சுற்று முற்றும் பார்த்தான். இருட்டில் முதலில் கண் தெரியவில்லை. வர வரத் தெரியலாயிற்று. அவனுக்குச் சமீபத்திலேயே பல வகை ஆயுதங்கள் குவிந்து கிடப்பதைக் கண்டான். அவனுடைய உடம்பை இறுக்கிக் கட்டியிருந்ததே தவிரக் கைகள் இறுக்கிக் கட்டப்படவில்லை. கைக்கட்டைத் தளர்த்திக் கொண்டு ஒரு கையை நீட்டி அங்கே கிடந்த கத்திகளில் ஒன்றை எடுக்கலாம்; உடம்பையும் கால்களையும் பிணைத்திருந்த கயிறுகளை அறுத்துவிடலாம். ஆனால் பிறகு என்ன செய்வது ? இந்த அறைக் கதவோ சாத்தப்பட்டிருக்கிறது. இதிலிருந்து வெளியில் போவது எப்படி? போனபிறகு அவ்வளவு அராபியர்களுடனும் மந்திரவாதியுடனும் அவன் தோழனுடனும் சேர்ந்தாற்போல் சண்டை போட முடியுமா?—அப்படிச் சண்டை போட்டு எல்லாரையும் கொன்று விட்டாலும் அப்புறம் என்ன பண்ணுவது? கப்பலைத் தன்னந் தனியாகத் தன்னால் செலுத்த முடியுமா? கப்பலைப் பற்றிய சமாசாரம் ஒன்றுமே தனக்குத் தெரியாதே!

ஆம்; மறுபடியும் அவசரப்படக் கூடாது; பொறுத்திருந்து பார்க்க வேண்டும். தன்னை உடனே கொல்ல முயலாமல் அவர்கள் கட்டிப் போட்டிருப்பதே கொஞ்சம் நம்பிக்கைக்கு இடம் அளிக்கிறதல்லவா? என்னதான் செய்யப் போகிறார்கள், பார்க்கலாமே?

ஆனால் நேரமாக ஆக, வந்தியத்தேவனுடைய பொறுமை பெரிதும் சோதனைக்காளாயிற்று. அடுப்புக்குள் போட்டு அவனை வேக வைப்பது போல் அந்த அறை அவ்வளவு புழுக்கமாயிருந்தது. உடம்பில் வியர்வை வியர்த்துக் கொட்டியது. கடற் பிரயாணம் இவ்வளவு வெதுப்புவதாயிருக்கும் என்று அவன் கனவிலும் எண்ணியதில்லை. பூங்குழலியுடன் அன்றிரவு படகில் சென்றதை நினைத்துக் கொண்டான். அப்போது எப்படிக் குளிர் காற்று வீசிற்று? உடம்புக்கு எவ்வளவு இதமாயிருந்தது? அதற்கும் இதற்கும் எத்தனை வித்தியாசம்? சுண்ணாம்புக் காளவாயில் போடுவது என்பார்களே, அது போல அல்லவா இருக்கிறது?

திடீரென்று ஏதோ ஒரு மாறுதலை அவன் உணர்ந்தான். ஆம்; கப்பலின் ஆட்டம் நின்று விட்டது. கப்பல் நகராமல் நின்ற நிலையில் நிற்பதாகத் தோன்றியது. புழுக்கம் இன்னும் அதிகமாயிற்று. தாகம் மிகுந்து நாவும் தொண்டையும் வறண்டன. ஏது! இனி வெகு நேரம் பொறுக்க முடியாது. கத்தியை எட்டி எடுத்து, கட்டுக்களை அறுத்துக் கொண்டு, புறப்பட்டுப் போய்ப் பார்க்க வேண்டியதுதான். கப்பலில் எங்கேயாவது குடி தண்ணீர் வைத்திராமலா இருப்பார்கள்?

வந்தியத்தேவன் சுற்று முற்றும் பார்த்தான். ஒரு மூலையில் சில தேங்காய்கள் கிடந்தன. ஆகா ! வெண்ணெய் இருக்க நெய்க்கு அழுவானேன்? அந்தத் தேங்காய்களைக் கொண்டு பசி, தாகம் இரண்டையும் தீர்த்துக் கொள்ளலாமே ?

கையின் கட்டுக்களை வந்தியத்தேவன் நன்றாய்த் தளர்த்தி விட்டுக் கொண்டான். கத்தியை எட்டி எடுக்கக் கையை நீட்டியும் விட்டான்.

அச்சமயம் காலடிச் சத்தம் கேட்டது. கதவு திறக்கும் சத்தமும் கேட்டது. நீட்டிய கையை மடக்கிக் கொண்டான்.

முன்னொரு தடவை வந்துவிட்டுப் போன மந்திரவாதி ரவிதாஸனும் அவனுடைய தோழனும் உள்ளே வந்தார்கள். இருவரும் வந்தியத்தேவனுக்கு இருபுறத்திலும் நின்று கொண்டார்கள்.

''கப்பல் பிரயாணம் எப்படி, அப்பா ! சுகமாயிருக்கிறதா?'' என்று ரவிதாஸன் கேட்டான்.

வந்தியத்தேவன், ''தாகம் கொல்லுகிறது; கொஞ்சம் தண்ணீர்!'' என்று பேச முடியாமல் பேசினான்.

''ஆ! எங்களுக்கும் தாகந்தான். அந்தப் பாவிகள் கப்பலில் தண்ணீர் வைக்கவில்லையே?'' என்றான் ரவிதாஸன்.

''காளிக்கு எல்லாரையும்விட அதிக தாகமா யிருக்கிறது. இரத்த தாகம்!'' என்றான் இன்னொருவன்.

வந்தியத்தேவன் திரும்பி அவனை உற்றுப் பார்த்தான்.

''என்னை ஞாபகமில்லையா, தம்பி ! மறந்து விட்டாயா? கடம்பூர் அரண்மனையில் குரவைக் கூத்துக்குப் பிறகு தேவராளன் வந்து வெறியாட்டம் ஆடினானே? 'காளித்தாய் பலி கேட்கிறாள்; ஆயிரம் வருஷத்து அரச குல இரத்தம் கேட்கிறாள்' என்று ஆவேசம் வந்து சொன்னானே?....''

''ஆ! இப்போது ஞாபகம் வருகிறது! நீதான் அந்தத் தேவராளன்!'' என்று வந்தியத்தேவன் முணுமுணுத்தான்.

''ஆமாம்; நான்தான்! ஆயிரம் வருஷத்து அரசகுமாரனைக் காளிக்குப் பலி கொடுக்கலாம் என்றுதான் இலங்கைக்கு வந்தோம். அது சாத்தியப்படவில்லை. அந்த வீர வைஷ்ணவனை வைகுண்டத்துக்கு அனுப்பப் பார்த்தோம். அதுவும் முடியவில்லை. நீயாவது வலுவில் வந்து சேர்ந்தாயே? மிக்க சந்தோஷம். இப்போதைக்குக் குறுநில மன்னர் குலத்து இரத்தத்தோடு காளி திருப்தி அடைய வேண்டியதுதான்!'' என்றான் தேவராளன்.

'' அப்படியானால் ஏன் தாமதிக்கிறீர்கள்?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''வீர வாலிபனாகிய உன்னைக் கண்ட இடத்தில் பலி கொடுத்துவிடலாமா ? கரை சேர்ந்த பிறகு எல்லாப் பூசாரிகளையும் அழைத்து உற்சவம் கொண்டாடியல்லவா பலி கொடுக்க வேண்டும்? முக்கியமாகப் பூசாரிணி வரவேண்டுமே?''

''பூசாரிணி யார் ?''

''யார் என்று உனக்குத் தெரியாதா? பழுவூர் இளைய ராணிதான்!''

வந்தியத்தேவன் சிறிது யோசித்துவிட்டு, ''உங்களுக்கு உண்மையில் அத்தகைய எண்ணம் இருந்தால் உடனே கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள். இல்லாவிடில் இங்கேயே தாகத்தினால் செத்துப் போவேன் !'' என்றான்.

''தண்ணீர் இல்லையே, தம்பி!''

''நீதான் மந்திரவாதியாயிற்றே?''

''நன்றாகச் சொன்னாய்! மந்திரம் போட்டிருக்கிறேன், பார்! இப்போது கப்பல் அசையாமல் நிற்கிறது தெரிகிறதல்லவா ? இரவுக்குள் சுழற் காற்று அடிக்கப் போகிறது. மழையும் வரும்!''

''மழை வந்தால் எனக்கு என்ன பயன் ? நீங்கள் மேல் தட்டில் இருப்பீர்கள்! நான் இங்கே....''

'' நீயும் மேல் தட்டுக்கு வரலாம். நாக்கை நீட்டி நீர் அருந்தித் தாகத்தைப் போக்கிக் கொள்ளலாம். நாங்கள் சொல்கிறபடி கேட்பதாயிருந்தால்...?''

''என்ன சொல்லுகிறீர்கள் ?''

''அந்த அராபியப் பிசாசுகளைச் சமுத்திர ராஜனுக்குப் பலி கொடுக்க வேண்டுமென்று சொல்லுகிறோம்.''

'' ஏன் ?''

''அவர்கள் கலிங்க நாட்டுக்கு இந்தக் கப்பலைக் கொண்டு போக வேண்டும் என்கிறார்கள். நாங்கள் கோடிக்கரையிலாவது நாகப்பட்டினத்திலாவது இறங்க வேண்டும் என்கிறோம்....''

''அவர்கள் ஆறு பேர், அதோடு பெரும் முரடர்களா யிருக்கிறார்களே?''

''அவர்களில் மூன்று பேர் தூங்குகிறார்கள்; மற்ற மூன்று பேர் உறங்கி வழிகிறார்கள். நாம் மூன்று பேரும் தூங்குகிற மூன்று பேரையும் முதலில் வேலை தீர்த்து விட்டால், அப்புறம் மூன்று பேருக்கு மூன்று பேர் சமாளிக்கலாமே ?''

வந்தியத்தேவன் சும்மாயிருந்தான்.

''என்ன, தம்பி, சொல்கிறாய்? எங்கள் யோசனைக்குச் சம்மதித்தால் உன் கட்டை அவிழ்த்து விடுகிறோம்.''

இளவரசரின் முகம் வந்தியத்தேவன் மனக் கண் முன்னால் வந்து நின்றது. ஆம்; அவர் இதை ஒப்புக் கொள்ள மாட்டார். தூங்குகிறவர்களைக் கொல்வதற்கு ஒரு நாளும் உடன்பட மாட்டார்.

''என்னால் முடியாது; தூங்குகிறவர்களைத் தாக்கிக் கொல்வது நீசத்தனம்.''

''முட்டாளே! சோழ நாட்டு மாலுமிகள் தூங்கிக் கொண்டிருந்தபோது தான் இந்த அராபியர்கள் அவர்களைத் தாக்கிக் கொன்றார்கள்.''

''மற்றவர்கள் இழிவான செயல் புரிந்தால் நானும் அவ்வாறு ஏன் செய்ய வேண்டும்?''

''சரி; உன் இஷ்டம்!'' என்றான் ரவிதாஸன். அருகில் கிடந்த ஆயுதக் கும்பலிலிருந்து ஒரு கூரிய பட்டாக் கத்தியை அவன் எடுத்துக் கொண்டான். தேவராளனோ, நுனியில் இரும்புப் பூண் கட்டியிருந்த சிறிய உலக்கை போன்ற தடியை எடுத்து வைத்துக் கொண்டான்.

இருவரும் அங்கிருந்து சென்றார்கள். ஆனால் அறையின் கதவைச் சாத்தி வெளியில் தாள் போடவில்லை.

அவர்கள் போன உடனே வந்தியத்தேவன் கையை நீட்டிக் கத்தி ஒன்றை எடுத்துத் தன்னைக் கட்டியிருந்த கயிறுகளை அறுத்துக் கொண்டான். குதித்து எழுந்து சென்று, மூலையில் கிடந்த தேங்காய் ஒன்றை எடுத்து உடைத்தான். இளநீரை வாயில் விட்டுக் கொண்டான். மிச்சமிருந்த தேங்காய்களை ஒரு சாக்கைப் போட்டு மூடினான்.

பிறகு, போருக்குத் தகுதியான நல்ல வாள் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டான். எந்த நிமிஷத்திலும் வெளியில் பாய்ந்து செல்வதற்கு ஆயத்தமாயிருந்தான்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் 'தட்' 'தட்' என்று இருமுறை சத்தம் கேட்டது. இரு உடல்கள் கடலில் எறியப்பட்டன என்று அறிந்து கொண்டான். உடனே பயங்கரமான பெருங் கூச்சல்; கைகலப்பு. கத்திகள் மோதும் சத்தம். — எல்லாம் மேல் தட்டிலிருந்து வந்தன.

வந்தியத்தேவன் கையில் பிடித்த கத்தியுடன் பாய்ந்தோடினான். ரவிதாஸனையும் தேவராளனையும் மற்ற நாலு அராபியர்களும் தாக்கி நெருக்கிக் கொண்டிருந்தார்கள். நெருக்கப்பட்டவர்களின் நிலை நெருக்கடியான கட்டத்தை அடைந்திருந்தது. வந்தியத்தேவன் பெருங் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடினான். அராபியர்களில் ஒருவன் திரும்பி அவனைத் தாக்க வந்தான். வந்தியத்தேவனுடைய கத்தி அராபியனுடைய கத்தியைத் தாக்கி அதைக் கடலில் போய் விழச் செய்தது; அராபியனுடைய முகத்தில் ஒரு வெட்டுக் காயத்தையும் உண்டாக்கிற்று. இரத்தம் வழிந்த பயங்கர முகத்தையுடைய அராபியன் கை முட்டியை ஓங்கிக் கொண்டு வந்தியத்தேவனுடைய மார்பில் குத்த வந்தான். வந்தியத்தேவன் சிறிது நகர்ந்து கொண்டான். அராபியன் தடாலென்று விழுந்தான். அவன் விழுந்த வேகத்தினால் இடம் பெயர்ந்த பாய்மரக் குறுக்குக் கட்டை ஒன்று அவன் தலையில் மடார் என்று விழுந்தது.

இன்னொரு அராபியனோடு வந்தியத்தேவன் சிறிது நேரம் துவந்த யுத்தம் செய்து அவனைக் கடலில் தள்ளினான்.

மந்திரவாதி ரவிதாஸனும் தேவராளனும் போர்த் திறமை வாய்ந்தவர்கள் அல்ல. ஆகையால் அராபியர் இருவருடன் தனித் தனி சண்டை போடுவதே அவர்களுக்குக் கஷ்டமாயிருந்தது. நேரமாக ஆகக் களைப்படைந்து வந்தார்கள். அச்சமயம் கடலில் ஏதோ விழுந்த சத்தம் கேட்டு அராபியர் இருவரும் தங்கள் தோழர்களின் கதி என்னவோ என்று திரும்பிப் பார்த்தார்கள். அதுதான் சமயம் என்று ரவிதாஸனும் தேவராளனும் அவர்களைத் தீர்த்துக் கட்டினார்கள்.



எல்லாம் முடிந்ததும் வெற்றி பெற்ற மூவரும் இளைப்பாற உட்கார்ந்தார்கள்.

''அப்பனே! நல்ல சமயத்தில் வந்தாய்! எப்படி வந்தாய்?'' என்று கேட்டான் ரவிதாஸன்.

''நீ ஏதோ மந்திரம் போட்டாய் போலிருக்கிறது. என்னைக் கட்டியிருந்த கட்டுக்கள் தாமாகவே அவிழ்ந்துகொண்டன. கையில் இந்தக் கத்தி வந்து ஏறியது!'' என்றான் வந்தியத்தேவன்.

''உன் தாகம் என்ன ஆயிற்று?''

''தேங்காய் ஒன்று என் தலைக்கு மேலாக வந்தது. அதுவாக உடைத்துக் கொண்டு என் வாயில் கொஞ்சம் இளநீரை ஊற்றியது!''

''ஓகோ! நீ வெகு பொல்லாதவன்!'' என்றான் தேவராளன். இருவரும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''தம்பி! உன்னைப் பரிசோதித்தோம். வேண்டுமென்றே உன் கட்டுக்களைத் தளர்த்தி விட்டிருந்தோம். ஆயுதங்களைப் பக்கத்தில் வைத்திருந்தோம். தேங்காய்களை உனக்குத் தெரியும்படி போட்டிருந்தோம்!'' என்றான் ரவிதாஸன்.

இவை யெல்லாம் பொய்யா, உண்மையா என்று வந்தியத்தேவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை. சற்று மௌனமா யிருந்தான்.

''அப்பனே! யோசித்துச் சொல்! நீ உயிர் பிழைக்க வேண்டுமா? பிழைத்துக் கரை சேர்ந்து உன் உற்றார் உறவினர் முகத்தைப் பார்க்க வேண்டுமா? பொருளும் போகமும் பதவியும் பட்டமும் பெற்று வாழ வேண்டுமா? விருப்பமிருந்தால் சொல்; எங்களுடன் சேர்ந்துவிடு! இவ்வளவு நலங்களையும் அடையலாம்'' என்றான் ரவிதாஸன்.

''தூங்கிக் கொண்டிருந்த மனிதர்களைக் கொன்றீர்கள் அல்லவா?'' என்று வந்தியத்தேவன் கேட்டான்.

''இரண்டு பேரைத்தான் கொல்ல முடிந்தது. மற்றவன் விழித்துக் கொண்டான். நீ முன்னமே எங்களுடன் சேர்ந்திருந்தால், இன்னும் சிறிது சுலபமாய்ப் போயிருக்கும்.''

''தூங்கிக் கொண்டிருப்பவர்களைக் கொல்லுகிறது எந்தத் தர்மத்தில் சேர்ந்தது? அவ்விதம் செய்ய எப்படி உங்களுக்கு மனம் வந்தது?''

''இந்தக் கடுகுக்கு நீ பயப்பட்டால் பெரிய பெரிய பூசினிக்காய்களை எப்படி விழுங்குவாய்? எங்களுடன் நீ சேர்வதாயிருந்தால்....''

''உங்களுடன், உங்களுடன் என்கிறீர்களே? நீங்கள் யார்?''

ரவிதாஸன் தேவராளனைப் பார்த்து, ''இனி இவனிடம் இரகசியம் தேவை இல்லை. ஒன்று, இவன் நம்முடன் சேர வேண்டும்; அல்லது கடலுக்குப் பலியாக வேண்டும். ஆகையால் இவனிடம் எல்லாம் சொல்லிவிடலாமே!'' என்றான்.

''எல்லாவற்றையும் நன்றாய்ச் சொல்லு!'' என்றான் தேவராளன்.

''கேள், தம்பி! நாங்கள் வீரபாண்டிய மன்னருடைய 'ஆபத்துதவிகள்'. அவரைக் காத்து நிற்பதாக ஆணையிட்டுச் சபதம் செய்தவர்கள்....''

''உங்களால் அது முடியவில்லை! ஆதித்த கரிகாலர் வெற்றி பெற்றார்...''

''எப்படி வெற்றி பெற்றார்? ஒரு பெண் பிள்ளையின் மூடத்தனத்தினால் வெற்றி பெற்றார். அவள் தன் மோக வலையின் சக்தியில் அதிக நம்பிக்கை வைத்திருந்தாள். அந்தச் சோழ குல நாகப் பாம்பைத் தன்னால் படம் எடுத்து ஆடச் செய்ய முடியும் என்று நம்பினாள். பாம்பு படம் எடுத்து ஆடத்தான் ஆடியது. ஆனால் அதன் விஷப் பல்லின் சக்தியை நடுவில் காட்டிவிட்டது. எங்கள் மன்னரின் தலை புழுதியில் உருண்டது. தஞ்சாவூர் வரையில் கொண்டு போனார்கள். தலையைப் பல்லக்கில் வைத்து ஊர்வலம் விட்டார்கள்! ஆகா! தஞ்சாவூர்! தஞ்சாவூர்! அந்த நகரம் அடையப் போகிற கதியைப் பார்த்துக் கொண்டிரு, தம்பி!''

இவ்விதம் கூறிய போது ரவிதாஸனுடைய சிவந்த அகன்ற கண்கள் மேலும் அகன்று அனலைக் கக்கின. அவனுடைய உடல் நடுங்கியது. பல் வரிசைகள் ஒன்றோடொன்று உராயும் சத்தம் நறநற வென்று பயங்கரமாய்க் கேட்டது. தேவராளனுடைய தோற்றமும் அவ்விதமே கோரமாக மாறியது.

''போனது போயிற்று. அதற்காக இனிமேல் என்ன செய்யப் போகிறீர்கள்? இறந்து போன வீரபாண்டியனை உயிர்ப்பிக்க முடியுமா?''

''வீரபாண்டியரை உயிர்ப்பிக்க முடியாது. அவ்வளவு சக்தி என்னுடைய மந்திரத்துக்குக் கூடக் கிடையாது. ஆனால், அவரைக் கொன்றவனையும் அவனைச் சேர்ந்தவர்களையும் பூண்டோடு அழித்துப் பழிக்குப் பழி வாங்குவோம். சோழ குலப் பாம்பு வர்க்கத்தைக் குஞ்சு குழந்தைகள் உள்பட நாசம் செய்வோம். எங்களுடன் நீ சேருகிறாயா? சொல்!''

''சோழ குலத்தை நாசம் செய்த பிறகு அப்புறம் என்ன செய்வீர்கள்?''

''எங்கள் மகாராணி யாருக்குப் பட்டம் சூட்டச் சொல்கிறாளோ, அவனுக்குச் சூட்டுவோம்.....''

''மகாராணி யார்?''

''தெரியாதா, தம்பி! பழுவூர் இளைய ராணியாகஇப்போது நடிப்பவள்தான்!''

''அப்படியானால் மதுராந்தகருக்கு?''

''அவனும் ஒரு பாம்புக் குட்டிதானே?''

''பழுவேட்டரையர்?....''

''ஆ! அந்தக் கிழவனை எங்கள் அரசனாக்குவோம் என்று நினைக்கிறாய்? அவ

**கல்கி** அக்டோபர் 5 மலரில்




**கி. ராஜேந்திரன்** எழுதும் புதிய சமூக நாவல்

ஆரம்பமாகிறது

னுடைய செல்வாக்கையும் பணத்தையும் உபயோகப்படுத்துவதற்காக.....''

''உங்கள் மகாராணி அவன் வீட்டில் இருக்கிறாளாக்கும்!''

''நன்றாகத் தெரிந்து கொண்டாயே? நல்ல யூகசாலி நீ!''

''வீரபாண்டியனுடைய மரணத்துக்குக் காரணம் ஒரு பெண் பிள்ளை என்று சொன்னீர்களே ?''

''அதுவும் பழுவூர் ராணிதான்! போரில் காயம்பட்டுக் கிடந்த வீரபாண்டியரைத் தான் காப்பாற்றுவதா- அவள் வாக்களித்தாள். அதை நிறைவேற்றவில்லை. அவளே துரோகம் செய்து விட்டாள் என்று நினைத்து அவளை உயிருடன் கொளுத்த நினைத்தோம். பழிக்குப் பழி வாங்குவதாக எங்களுடன் சேர்ந்து அவளும் சபதம் செய்தபடியால் அவளை உயிரோடு விட்டோம். இன்று வரையில் அவள் வாக்கை நிறைவேற்றி வருகிறாள். ஓ! அவளுடைய உதவி மட்டும் இல்லாவிட்டால் நாங்கள் இவ்வளவு செய்திருக்க முடியாது.''

''இன்னும் நீங்கள் ஒன்றும் சாதித்து விடவில்லையே ?''

''கொஞ்சம் பொறு! அப்பனே! பார்த்துக் கொண்டேயிரு!'' என்றான் ரவிதாஸன்.

''நம்மிடமிருந்து இவன் எல்லாம் தெரிந்து கொண்டான். நாம் கேட்டதற்கு மறுமொழி ஒன்றும் சொல்லவில்லையே?'' என்றான் தேவராளன்.

''தம்பி! என்ன சொல்லுகிறாய்? எங்களுடன் சேர்கிறாயா? யார் கண்டது? உனக்கே ஒரு வேளை அதிர்ஷ்டம் அடிக்கலாம். நீயே ஒரு வேளை தென் தமிழகத்தின் வீர சிம்மாசனத்தில் ஏறினாலும் ஏறலாம். என்ன சொல்கிறாய்?''

சில காலத்துக்கு முன்னேயென்றால் வந்தியத்தேவன், ''ஆஹா! உங்களுடன் சேர்கிறேன்!'' என்று சொல்லியிருப்பான். ஆனால் இளவரசருடன் மூன்று நாள் பழகியது அவனுடைய மனப் போக்கில் ஒரு பெரிய மாறுதலை உண்டு பண்ணியிருந்தது. பொய் புனைசுருட்டுகள், சமயோசித தந்திரங்கள் — இவற்றில் அவனுக்குப் பற்று விட்டுப் போயிருந்தது. ஆகையால் பேச்சை மாற்ற விரும்பி, ''இந்தக் கப்பலை எப்படிப் பிடித்தீர்கள்? சற்று முன் யமனுலகுக்கு அனுப்பிய அரபு நாட்டாருடன் எப்படிச் சிநேகமானீர்கள்?'' என்று கேட்டான்.

''எல்லாம் என்னுடைய மந்திரசக்தி, அப்பனே! திரிகோண மலையில் இவர்களிடமிருந்துதான் நாங்கள் குதிரைகளை விலைக்கு வாங்கினோம். அந்தக் குதிரைகளைக் கொண்டுதான் உங்களைத் தொடர்ந்து முன்னும் பின்னுமாக வந்து கொண்டிருந்தோம். யானை இறவுத் துறையில் இளவரசர் இறங்கி ஓடியதைப் பார்த்தோம். அவருக்கு முன்னால் இங்கு வந்துவிடத் தீர்மானித்துக் குறுக்கு வழியில் வந்து சேர்ந்தோம். இங்கே வந்து பார்த்தால், எங்கள் பழைய சிநேகிதர்கள் இந்தக் கப்பலைக் கைப்பற்றியிருந்தார்கள். அவர்கள் ஏறி வந்த கப்பல் முல்லைத் தீவுக்கு அருகில் கரை தட்டி உடைந்து போய் விட்டதாம். இங்கே ஒளிந்திருந்து இந்தக் கப்பலைக் கைப்பற்றிக் கொண்டார்கள். கடலோரத்தில் வழி காட்டுவதற்காக எங்களையும் வருகிறீர்களா என்று கேட்டார்கள். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று.''

''அது எப்படி ?''

''அந்தச் சோழ குலத்து இளநாகம் சோழ சேநாதிபதியுடன் பேசிக் கொண்டிருந்ததைக் கேட்டோம். எப்படியும் சோழ நாட்டுக்கு அவன் திரும்பி வந்து சேர்வான் என்று அறிந்துகொண்டோம். அது மட்டுமல்ல, தம்பி! இலங்கையில் ஊமைப் பெண் பூதம் ஒன்று இருக்கிறது. அந்தப் பூதம் எங்கள் மந்திரத்துக்குப் பதில் மந்திரம் போட்டு அருள்மொழிவர்மனைக் காப்பாற்றிக் கொண்டிருந்தது. ஆனால் சோழ நாட்டுக்கு அது வராது....''

வந்தியத்தேவன் அன்றிரவு அநுராதபுரத்தில் நடந்ததையெல்லாம் நினைத்துக் கொண்டான்.

ரவிதாஸன் திடீரென்று சிரித்தான்.

''இது என்ன சிரிப்பு, எதைக் கண்டு?'' என்றான் வந்தியத்தேவன்.

''ஒன்றுமில்லை, தம்பி! இந்த அரபு நாட்டாரின் சுபாவத்தை எண்ணினேன். சிரிப்பு வந்தது. இவர்கள் இவ்வளவு முரட்டு மனிதர்கள் அல்லவா? மனிதர்களைக் கொல்வது இவர்களுக்கு வாழைக்காயை அரிவது போன்றது. ஆனால் குதிரைகளிடம் இவர்களுக்கு அளவில்லாத அபிமானம். குதிரைகளின் கால் குளம்பில் இரும்புப் பூண் அடித்துத்தான் இவர்கள் நாட்டில் குதிரைகளை ஓட்டுவார்களாம். நாம் குதிரைகளை வெறுங் காலுடன் ஓடச் செய்கிறோமாம். அதனால் நாம் கருணையற்ற, அநாகரிக, மிருகங்களுக்கும் கேடான மனிதர்களாம்! நம்மிடம்

குதிரைகளை விற்பதே பாவமாம்!.... இன்று காலையில் என்ன நடந்தது, தெரியுமா ?.....''

''சொல்லுங்கள்....''

''கப்பலில் எல்லாரும் ஏறிக் கொண்டோம். பாய்மரங்களை விரித்தோம். கப்பல் கிளம்பி விட்டது. அப்போது கரையில் ஒரு குதிரையின் காலடிச் சத்தம் கேட்டது. அவ்வளவுதான். முல்லைத் தீவில் உடைந்த கப்பலிலிருந்து தப்பிக் கரையேறிய அவர்களுடைய குதிரைகளில் ஒன்றாயிருக்கலாம் என்று சந்தேகித்தார்கள். அவர்களில் ஒருவன் கப்பலிலிருந்து இறங்கிப் பார்த்து விட்டுத்தான் வருவேன் என்றான். என்னையும் அவனுடன் சேர்த்து அனுப்பினார்கள்......''

''பிறகு?''

''குதிரை அகப்படவில்லை, தம்பி! நீ அகப்பட்டாய்! எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று, பார்! இந்தக் குதிரைப் பிரியர்களை வேலை தீர்ப்பதற்கு எவ்வளவு சௌகரியமாய்ப் போயிற்று ?''

''எல்லாம் சரிதான்; இந்தப் பிள்ளை நம்முடைய கேள்விக்கு இன்னும் விடை சொல்லவில்லை'' என்று ஞாபகப்படுத்தினான் தேவராளன்.

''சொல்லுகிறேன், ஐயா! சொல்லுகிறேன். நான் சோழ குலத்துக்கு ஊழியம் செய்ய ஏற்றுக் கொண்டவன். ஒரு நாளும் உங்களுடன் சேர மாட்டேன்..''

''வேளக்காரப் படையைச் சேர்ந்திருக்கிறாயா? சத்தியம் செய்து கொடுத்திருக்கிறாயா?''

''அதெல்லாம் இல்லை.''

''பின்னே என்ன தயக்கம்? நீ போர் வீரன். எந்தக் கட்சியில் அதிக அநுகூலம் இருக்கிறதோ, அதில் சேர வேண்டியதுதானே!''

சோழ குலத்தாருடன் உறவு பூணுவதற்கு எல்லாச் சபதங்களைக் காட்டிலும் பலம் அதிகம் கொண்ட காரணம் தனக்கு இருக்கிறது என்பதை வந்தியத்தேவன் அவர்களிடம் சொல்லவில்லை. இளைய பிராட்டியின் கடைக்கண் பார்வையையும் முல்லை நிகர்ப் புன்னகையையும் காட்டிலும் சோழ குலத்தாருக்கு உயிரைக் கொடுக்க வேறு காரணம் தனக்கு வேண்டுமா? அப்புறம் இளவரசரின் இணையில்லாச் சிநேகம் வேறு இருக்கிறது! அவருடன் ஒரு தடவை சிநேகமானவன் மறுபடியும் மாற முடியுமா?

''எது எப்படியிருந்தாலும், உங்களுடைய கொலைகாரக் கூட்டத்தில் நான் சேரமாட்டேன்!'' என்றான் வந்தியத்தேவன்.

''அப்படியானால் உன் உயிரைச் சமுத்திர ராஜனுக்குப் பலியிட ஆயத்தப்படு!'' என்றான் ரவிதாஸன். **(தொடரும்)**



# சபரி உண்ட கனி

ரா. கணபதி

**ப**ம்பைக் கரை நோக்கி நடந்து கொண்டிருந்தனர் ராமனும் லக்ஷ்மணனும்.

தேவியை இழந்த தாசரதி வையகம் வானகம் எங்கும் அவளையே தேடுவதுபோல் வானத்தைப் பார்த்தபடி நடந்தான்.

மலை உச்சிகள் திருஷ்டிக்குக் கரை கட்டின.

அந்தச் சிகரங்களில் நெடிதுயர்ந்த மரங்கள். மரங்களில் தேனடைகள்.

சூரிய வெளிச்சம் அந்த மரங்களின்மீது படும்போது ரசகுண்டுகளாகத் தேன் கோத்துக் கொண்டு நிற்பது தெரிந்தது. ஆயினும் அந்தத் தேன் துளிகள் சொட்டாமல் அப்படியே குண்டு குண்டாகத் தொங்கிக் கொண்டிருந்தன.

அதையே ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான் ராமன்.

"அண்ணா, அவை தேனடை அல்ல; அவற்றிலிருந்து பிதிர்ந்து நிற்பவை தேன் துளிகளும் அல்ல என நினைக்கிறேன். இவை தாம் கௌத்ரம் என்ற கனி வர்க்கம் போலும். அடை அடையாக, குலை குலையாக அந்தப் பழங்கள் தேன் நிறத்தில் பழுத்துத் தொங்குகின்றன. அதனால்தான் தேன் துளிகளாகத் தெரிந்தபோதிலும் அவை சொட்டாமலேயே இருக்கின்றன" என்றான் லக்ஷ்மணன்.

அவனுக்குத்தான் அந்த மர்மம் தெரிய முடியும். ஜானகிக்காக ராமன் வெளிப்படக் கண்ணீர்த் துளிகளைச் சிந்தியபோதும், லக்ஷ்மணனோ, வெளியில் கண்ணீர்த் துளிகளைக் காட்டாமல் மனத்திலேயே அவற்றைப் பழுக்கப் போட்டிருப்பவன் அல்லவா?

காற்று வீசியது.

மலை முகட்டு மரங்களை அணைந்து வந்த காற்றில் மதுரக் கனிகளின் மணம் கமகமத்தது.

"அண்ணா! அந்தக் கனிகளைப் பறித்து வரட்டுமா?" என்று வினவினான் லக்ஷ்மணன்.

வேண்டாம் என வேதனையுடன் சைகை காட்டிவிட்டு மேலே நடந்தான் ராமன்.

'ஆஹா, மதனி இன்றி அண்ணல் மட்டும் இந்த அமுதக் கனிகளை உண்பாரா? வெந்த புண்ணில் கோலிட்டது போல் அவிவேகமாக நடந்துகொண்டு விட்டோமே!' என்று வருந்தியபடி லக்ஷ்மணன் தமையனைப் பின்பற்றினான்.

அன்னை அபகரிக்கப்பட்டதிலிருந்து கடந்த சில தினங்களாக ராமச்சந்திரன் ஏதுமே உண்ணாதது லக்ஷ்மணனுக்குத் தாங்கொணாத் துன்பமாயிருந்தது.

ராமன் பரம ரசிகன். அவனுக்கு வனத்தின் அற்புத கந்தமூலக் கனிச் செல்வங்களைப் படைத்து, அவன் ரசித்து உண்பதைக் காணும்போது லக்ஷ்மணன் புளகிப்பான்.

தானே உண்பதை விட, தமையன் உண்பதைக் காண்பதில் அவனது உதரமும் உள்ளமும் நிறைந்து விடும்.

அவனுக்கு உணவு அவசியமில்லை. ராமனுக்கும் அவசியமில்லை. பலை அதிபலை ஆகிய மந்திரங்களை விசுவாமித்திரரிடமிருந்து உபதேசிக்கப் பெற்ற அவ்விருவருக்குமே ஊணும் உறக்கமும் தேவையில்லை. லக்ஷ்மணன் இந்த மந்திர சக்தியாலேயே உண்ணாமலும் உறங்காமலும் இருக்கிறான் எனக் கருதிய ராமனோ அவனுக்குக் கைங்கரிய புண்ணியத்தைத் தருவதற்காகவும், அவனது மனத்தை நிறைவிப்பதற்காகவுமே, அவன் திரட்டி வரும் உணவை உண்பான்; அவன் சித்தம் செய்கிற சயனத்தில் படுத்து உறங்குவான்.

ஆனால் ஜானகி காணாமல் போன பின் ராமன் உண்ணவுமில்லை; உறங்கவும் இல்லை. அவனுக்கு உணவு தேடிக் கொண்டு வருகிற பாக்கியத்தையும் சயனம் சித்தம் செய்கிற பாக்கியத்தையும் இழந்தோமே என்று வருந்தினான் இலக்குவன்.

பம்பையின் மேற்குக் கரை.

விருட்சங்கள் இண்டு இடுக்கு விடாமல் அடர்ந்த பிரதேசம். நிழலும் பழமும் தந்து பரோபகாரமே உருவாக நிற்கும் தருக்கள் நிறைந்த அந்தப் பகுதியில் மாமுனிவர்களின் இருக்கைக்குரிய தெய்விகம் தவழ்ந்தது.

ஆனால் அங்கு முனிவர்கள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. நிர்மானுஷ்யமாகவே காணப்பட்டது.

ஜனநடமாட்டமற்ற அங்கு ஓர் ஆசிரமம் தெரிந்தது.

உலகை ரமிக்கச் செய்வதால் ராமன் எனப் பெயர் கொண்ட பிரபுவையே ரமிக்கச் செய்தது அந்தச் சூழல் — தேவியை இழந்திருந்த துயரத்திலும்!

ராம லக்ஷ்மணர்களுடைய காலடி அங்கிருந்த சருகுகளில் சரசரத்ததுதான் தாமதம், சருகு போலவே காய்ந்து உலர்ந்திருந்த ஒரு மூதாட்டி அந்தப் பர்ணசாலையிலிருந்து வெளிப்பட்டாள்.

வெளித் தோற்றத்துக்குத்தான் சருகு! உள்ளுக்குள்ளே அந்த விருட்ச சமூகங்களின் சாற்றிலேயே ஊறியது போன்ற பசுமை!

பச்சை வண்ணனின் பாதத்தைப் பற்றிக் கொண்டது அந்தப் பசுமை.

கனிகளைக் கொய்தும் கிழங்குகளை அகழ்ந்தும் களைத்த அக்கிழவியின் கரங்கள் நீண்ட நேரம் ராகவனின் சேவடிகளைப் பற்றிக் கொண்டு சிரம பரிகாரம் செய்து கொண்டன.

தவ விரத நியமங்களாலும் வயோதிகத்தாலும் இளைத்த அக்கிழவியிடமிருந்து பிர

வகிக்கும் செழித்த அன்பு வெள்ளத்தை வியந்து கொண்டிருந்த ராமன் வாய் திறந்து பேசினான்: ''தவநிதியே! சபரியே! உன் தவம் இடையூறின்றி நடைபெறுகிறதா? உன் மனத்தில் ஊறும் ஆனந்தம் தடையுறாமல் பொலிகிறதா? அழகொழுகப் பேசுபவளே! நீ குருவுக்குச் செய்த பணிவிடை பலித்ததல்லவா? உனக்கு வேண்டிய ஆகாரங்கள் சிரமமின்றிக் கிடைக்கின்றனவா?''

'தவநிதி' (தபோதனே) என்றும், 'அழகொழுகப் பேசுபவள்' (சாரு பாஷிணி) என்றும் ஸ்ரீராமன் அழைத்தது அவளது பெருமை!

சபரி கள்ளமறியாமல் கட கடவென்று சிரித்தாள்.

''ராகவா! சூரியனே எதிரில் வந்து நின்று கொண்டு, 'இருட்டு இருக்கிறதா, போய் விட்டதா?' என்று கேட்பது போலிருக்கிறது உன் கேள்வி. உன்னை என் கண்ணுக்கு மெய்யாக எப்போது காண்கிறேனோ அப்போதே என் தவம் இடையூறின்றி சித்தி பெற்றதாகத்தானே பொருள்! உன்னைக் கண்ட பின் என். மனத்தின் ஆனந்தம் மான்வதேது? என் குரு கருணையின் பலனாக — பழமாகத்தான் — நீ இதோ வந்து நிற்கிறாய்...'' என்று கூறிவிட்டு மீண்டும் சூதறியாமல் வாய் விட்டுச் சிரித்தாள் அவள்.

பிறகு லக்ஷ்மணனைப் பார்த்து, ''நீதான் அப்பா உன் அண்ணனுடைய மற்ற கேள்விக்கு விடை சொல்ல வேண்டும். எனக்கு ஆகாராதிகள் சிரமமின்றிக் கிடைக்கிறதா என்று கேட்டானே, அதைத்தான் சொல்கிறேன்'' என்று கூறிவிட்டு ஏதோ பெரிய வேடிக்கை நிகழ்ந்தது போல் மறுபடியும் சிரித்தாள்.

சடேரென்று அவளுக்கு லஜ்ஜை பிறந்தது. அடக்கமே உருவாக ஆசாரியருக்குப் பணிவிடை புரிந்து வந்தவள் அவள். இன்றைக்கு ராம தரிசன இன்ப வெள்ளம் அந்த அடக்கமதனை உடைத்துக் கொண்டு பெருகுவதை உணர்ந்தாள். எத்தனை இன்பம் ஏற்பட்டாலும் அடக்கத்தை விடக் கூடாது என்ற உணர்வினைப் பெற்றுத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

ராமனைப் பணிவுடன் நோக்கி, ''கடவுளரில் சிறந்த தேவ வரனாகிய நீ, மனிதரில் சிறந்த புருஷ ரிஷபமாக வந்திருக்கிறாய். உன் பார்வை பட்டதில் என் பாவங்கள்



யாவும் பாறி விழுந்தன; பாவனமானேன். என் தவம் பழுத்தது; வாழ்வும் பழுத்தது.

''பிரபு! என் குருநாதனுகிய மதங்க முனிவரும், அவருடைய சீடர்களான தபஸ்வி களும் சிறிது காலத்துக்கு முன் விமானத் தில் ஆரோகணித்து மேலுலகுக்குப் புறப் பட்டனர். குருநாதன் பணிவிடை யின்றி என்னுல் எப்படி வாழ முடியும்? எனினும் என் நலனையன்றி அவரால் வேறெதுவும் எண்ண முடியாது என்று எனக்குத் தெரியுமா தலால் 'என்னை ஏன் விட்டுச் செல்கிறீர்கள்?' என்று கூட நான் கதறவில்லை. கருணு மூர்த்தியாகிய மதங்க மகரிஷியே விமானத்தி லிருந்து கூறினர்: 'எங்களுக்குக் காலம் விதிக்கப்பட்டதால் நாங்கள் புறப்பட்டு விட்டோம்! ஆனல் மேலுலகம் செல்லும் எங்களை விட நீயே பெரும் பாக்கியசாலி! ஏனெனில் இன்னும் சிறிது காலத்தில் இங்கு பரம புருஷன் ஸ்ரீராமனுக வரப் போகிறுன். இப்போது அவன் சித்ரகூடத்தில் எழுந் தருளி யிருக்கிறுன். அடுத்து தண்டகவனம் புகுந்து, பம்பை அடைவான். நீ அவனைத் தரிசித்து அதிதி சத்காரம் செய்யப் போகி ருய். பணிவிடையே உருவான உனக்குப் பணிவின் மூர்த்தியான லக்ஷ்மணனின் தரிசன மும் கிடைக்கும். அதன்பின் நீயும் நித்திய வாழ்வு தரும் மோட்ச லோகம் செல்லுவாய்' — இவ்வாறு அருளினர் என் குருநாதர்.

''அன்றிலிருந்து உனக்காகக் கிழங்கும் கனியும் சேகரித்து வருகிறேன்.... இதோ'' என்று சொல்லிக் கொண்டு பக்தியே உரு வான பாட்டியம்மை உள்ளே சென்ருள்.

ஏராளமான பழ வகைகளைக் கொண்டு வந்து அண்ணலுக்குச் சமர்ப்பித்தாள் சபரி. வயதிலும், தவத்திலும், அன்பிலும் பழுத்த பழமாக விளங்கும் அவளை வாஞ்சையுடன் நோக்கினன் ராமன்.

அவன் கண்ணுக்கு அவள் பழமாகத் தெரிந்தாள்.

அவள் கண்ணுக்கோ அவனே பழமாகத் தெரிந்தான். 'என் தவசித்தியான பழம், என் குரு சேவையில் பழுத்த பழம் இதோ ராமனுக வந்திருக்கிறது' என்று எண்ணி உள்ளம் நிரம்பி வழிய, ஒவ்வொரு கனியாக எடுத்து ராமனின் கரமலரில் வைத்தாள். அந்தக் கரமலர் கனியைக் கனிவாயில் ஊட் டும் அழகைக் கண்டு ஆனந்த பாஷ்பம் வடித்தாள்.

மேனி வண்ணம் இலைக் கொத்துக்களாக வும், சடைகள் விழுதாகவும், திருவாய் கனி யாகவும், கரம் மலராகவும், மரவுரி தரித்த ராகவனே ஒரு கல்ப விருக்ஷமாக அவள் கண் களுக்குத் தோன்றினன். ஆனல் ஒரு வித்தி யாசம்! இந்த விருட்சம் கனிகளை உட் கொண்டது!

லக்ஷ்மணனின் ஆனந்தம் சொல்லத்தர மன்று.

நீண்ட நாட்களாக உண்ணுமல் இருந்த அண்ணனின் ஒட்டிய திரு உதரம் இன்று புடைத்தெழ அவன் மேன்மேலும் பழ வகைகளைப் பட்சித்ததைக் கண்டு சபரியை மனத்தால் வணங்கினன் லக்ஷ்மணன்.

''அடடா! அத்தனை பழத்தையும் நானே உண்டு விட்டேனே! நீயும் லக்ஷ்மணனும் உண்ணவில்லையே?'' என்ருன் ராமன்.

''அது அவசியமில்லை, ஆம். அவசியமே இல்லை'' என்ருள் சபரி.

''ஏன்?'' என்ருன் ராமன்.

''லக்ஷ்மணனுக்கு அந்த ரகசியம் தெரியும்'' என்ருள் கிழவி.

அவதார ரகசியத்தை அவிழ்க்காமலே வைத்திருந்த ராமன் பேச்சை மாற்றினன்.

''பாட்டி! உன் ஆசிரம மகிமையெல்லாம் கபந்தன் சொல்லிக் கேட்டேன். அதைக் கண்ணுறவும் காண ஆசைப்படுகிறேன்'' என்ருன்.

ராமபத்ரன் இப்படிப் பேச வேண்டுமாயின் அந்தப் பாட்டியம்மையின் பாக்கியம்தான் எப்படிப்பட்டது? சாட்சாத் ராமனின் வாக்கி லிருந்தாக்கும் இப்படிப்பட்ட வார்த்தைகள் மலர்ந்தன என்பதைத்தான் ஆதிகவி, 'ராம வக்த்ராத் விநிஸ்ருதம்' என்கிருர்!

''என் மகிமையாவது? எல்லாம் என் குருநாதர் மதங்கரின் மகிமைதான். வா, இந்தச் சூழல் முழுதும் நிறைந்துள்ள அவரது பெருமையைக் காட்டுகிறேன். அதோ, மேகங்களை மறைத்தபடி இன்னெரு மேகக் குவியல் போல் பட்சிகள் அடர்த்தியாகப் பறந்து வருவதைப் பார். அவை இங்குதான் வந்து அமையும். அதேபோல் மிருகங்களும் தங்கள் பகைமை எல்லாம் மறந்து இந்த ஆசிரமத்தில்தான் வந்துறங்கும். இங்கே பார்த்தாயா, யக்ஞவேதி? உள்ளத்தை அடக் கிய என் குருநாதன் இங்குதான் வேள்விகள் வேட்டார். ஆஹா! இப்போதுகூட என் காதில் அந்த மந்திரங்கள் ரீங்காரமிடுகின் றன. நாசியில் ஹோம மணம் முட்டுகிறது. அதோ அதுதான் பூஜாக்ருஹம். பூக்கள் இன்னமும் இறைந்து கிடப்பதைப் பார்த் தாயா? அவை மண்டப மையத்திலிருந்து விலகி விழுந்திருப்பதைப் பார்! விருத்தாப் பியத்தோடு உணர்ச்சிப் பரவசமும் சேர்ந்த தால் மதங்க முனிவர் புஷ்பாஞ்சலி செலுத் தும்போது அவர் கைகள் நடுங்கியதும், அந்த நடுக்கத்தில் மலர்கள் இடம் விலகி விழுந்த தும் அப்படியே கண் முன் நிற்கிறது. அவர் என்றே தூவிய பூக்கள் இன்னும் வாடா மல் இருப்பது உனக்கு ஆச்சரியமாயிருக் கிறதல்லவா? காரணம் சொல்கிறேன் கேள். அவர் மேலுலகம் செல்லும்போது, என் வருத்தத்தை உணர்ந்து, 'நான் மறைந்து விட்டதாக உனக்குத் தெரியாது. எல்லாம் நான் இருப்பது போலவே இருக்கும்' என் ருர். அந்த வாக்கின் சக்தியில்தான் அன்று அவர் அர்ச்சித்த குவலய மலர்கள் இன்றும் வாடவில்லை. இதில் வேறு சில மலர்கள் உள்ளன அல்லவா? இவை என்றுமே வாடா தவை. இம்மலர்களை மதங்காசிரமம் தவிர வேறு எங்குமே காண முடியாது. அவற் றின் கதையே தனி....''

உற்சாகத்துடன் தொடர்ந்தாள் கிழவி. ''என் குருநாதனுக்கு நிறையச் சீடர்கள் உண்டு. அவர்கள் அவரது ஹோமத்துக்காக வும், அர்ச்சனைக்காகவும், நிவேதனத்துக்காக வும் போட்டி போட்டுக் கொண்டு சமித்தும், பூவும் பழமும் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு வருவார்கள். அந்தப் பளுவில் சீடர்களின் உடல் வியர்த்து, வியர்வைத்

துளிகள் விழும். அப்படி விழுந்த துளிகளே இந்தப் புஷ்பங்களாயின.''

சபரியின் வாக்கும் புஷ்பங்களாகத்தான் உதிர்ந்தது.

''இதோ, இங்கே ஒரு தீர்த்தம் இருக்கிறது பார். இது சாதாரண தீர்த்தம் அல்ல. வயோதிகரான என் குருநாதன் ஏழு கடல்களிலும் நீராட விருப்பம் கொண்டார். அவற்றை அவர் நினைத்தவுடன், ஸப்த சாகரங்களுமே இங்கு தீர்த்தமாக வந்துவிட்டன. அது இன்னும் வற்றாமல் இருப்பதைக் காண்கையில் இங்கு அவர் இருப்பது போலவே தோன்றுகிறது. பரலோகம் செல்கிற தினத்தில் இதில்தான் ஸ்நானம் செய்தார். பிறகு இவ்வளவு பேர்கள் இருந்தும், நான் ஒருத்தி இருந்தும், தமது மரவுரியைத் தாமே பிழிந்து மரத்தில் கட்டினார். அதோ, பார்த்தாயா அந்த மரத்தில்தான்... ஆஹா! அந்த மரவுரி இன்னும் ஈரம் காயாமல் சொட்டிக் கொண்டே இருக்கிறதே! ராமா! என் குருநாதன் இங்கு நித்தியவாசம் செய்கிறாரா? அல்லது நீ வருகிறாய் என்பதற்கு முன்னோடியாக நேற்றிரவு மழை பெய்து, அதில்தான் மரவுரி நனைந்திருக்கிறதா?''

ராமன் விடையேதும் சொல்லவில்லை. கிழவியின் அன்பு மழையில், குரு பக்தியில் தொப்பலாக நனைந்து கொண்டிருந்தான்!

எல்லாவற்றையும் சுற்றிக் காட்டிவிட்டு மீண்டும் ஆசிரமத்தில் ராகவனை எழுந்தருளச் செய்தாள் சபரி.

அவனைக் கண்ணாரக் கண்டு சேவித்தாள்.

உடல் புளகமுற வந்தனம் செய்தாள்.

''ஐயனே! உன் கதையை மறந்து என் கதையையே சொன்னேன். உன் துயரத்தை மறந்து என் ஆனந்தத்திலேயே அமிழ்ந்துவிட்டேன். நீ தேவிக்காகத் துடிக்கிறாய். தேவி உனக்காக எங்கு துடிக்கிறாளோ? அவளைத் தேடி விரைகின்ற நீ பேதையான என் பொருட்டு இவ்வளவு பொழுதைச் செலவிட்டாய். இன்னும் உன்னை இருத்திக்கொள்வது தகாது. போய் வா! ஆனால் நீ போனபின் இந்தக் கூண்டில் மூச்சு மேவாது. என்னை என் குருநாதனின் பரம பதத்துக்கு நீயே அனுப்பிவிட்டுப் போவாயாக!'' என்றாள்.

அவனது துயரக் கதையை நினைவுபடுத்திய பின்பும் ராமன் எல்லையற்ற ஆனந்தத்திலேயே இருந்தான். 'ப்ரஹர்ஷம் அதுலம் லேபே' என்கிறார் முனிவர்.

''அம்மா! உன்னால் அன்புடன் அர்ச்சிக்கப்பட்டேன். உனக்கு என்ன பிரதி செய்ய முடியும்? சுகமாக உன் விருப்பப்படியே உத்தம பதம் அடைவாயாக'' என்று நாத் தழுதழுக்கக் கூறினான்.

சபரியின் உள்ளம் துள்ளியது.

குருநாதன் வேள்விகள் வேட்ட புனித யக்ஞவேதியை நோக்கி நடந்தாள். அதில் தீ வளர்த்தாள். தவ அக்கினியாக ஜொலிக்கும் தன் துறவுத் திருமேனியை அந்தத் தீயில் ஆஹுதியாக அளித்துக் கொண்டாள்.

மரவுரியும் ஜடையும் பூண்ட விருத்த தேகம் மறைந்தது. திவ்விய ஆபரணமும் திவ்விய மாலைகளும், திவ்விய வஸ்திரமும் தரித்து, கண்ணுக்கினிய பேரழகியாக, மின்னல் போல் திசைகளை யெல்லாம் ஒளிர்வித்துக் கொண்டு மேலே எழும்பினாள் சபரி. குருநாதனுடைய புண்ணிய லோகத்தைச் சென்றடைந்தாள்.

சபரி விண்ணுலகம் செல்வதைக் கண் பனிக்கப் பார்த்துக் கொண்டிருந்தான் ஸ்ரீ ராமன்.

ஏழு கடலும் இணைந்த புண்ணிய தீர்த்தத்தில் நீராடி நீர்க் கடன் வார்த்தான்.

''லக்ஷ்மணா! இன்றோடு அமங்களம் யாவும் தொலைந்தன. இனி கல்யாண கோலாகலம்தான். என் மனம் ஆனந்தத்தில் திளைத்திருக்கிறது. இனி கண்ணுக்கினிய பம்பைக்கு நடையைக் கட்டுவோம். வா'' என்று உற்சாகமாகப் புறப்பட்டான்.

மதனியை இழந்து சோர்ந்திருந்த அண்ணனின் புதிய உற்சாகத்தையும், அன்னபானத்தைத் தொடாதிருந்த அவன் இன்று வயிறாரக் கனிகளை உண்டதையும் எண்ணிய லக்ஷ்மணன், 'சபரியின் பாக்கியத்தை என்னென்பேன்!' என்று வியந்தான். 'எந்தநி நே வர்ணிந்துநு சபரீ பாக்யமு' என்று தியாகையரும் பாடினார்.

சபரர்கள் வேடர்களில் ஒரு ஜாதியினர். எனவே சபரியை வேடமாதாகச் சொல்வதுண்டு. வால்மீகியைப் பூர்வத்தில் வேடராகச் சொல்வது போலவே இதற்கும் பௌராணிகர்கள் கதைகள் சொல்வார்கள்.

ஆனால் வால்மீகத்தில் இருவரைப் பற்றியும் பழைய விருத்தாந்தம் ஏதும் இல்லை. பழங்கதை முழுவதையும் துடைத்து எறிந்துவிட்டவர்கள் விஷயத்தில் அது அவசியமில்லை என்று முனிவர் ஒதுக்கி விட்டார் போலும்!

பௌராணிகர்களின் கதையில் சபரி பழங்களைக் கடித்துப் பார்த்து, அவற்றில் மிகவும் இனியவற்றையே ராமனுக்காகச் சேர்த்து வைத்ததாகவும் சொல்வதுண்டு.

வால்மீகி இப்படிக் கூறவில்லை. வால்மீகியின் வாக்குக்கு அதிகமாக நாமும் போகத் தேவை இல்லை. ஏனெனில் சபரி கனிகளைக் கடித்துப் பார்த்திருந்தாலும், அவற்றின் சுவை அவளுக்குத் தெரிந்திருக்காது. அமுதத்தைச் சுவைக்கும் நாவுக்குச் சர்க்கரையின் இனிப்பும் தெரியாது அன்றோ? ராம நாமத்தையே நாவில் வைத்துக் கட்டிக் கொண்ட சபரிக்கு வேறு கனிகளின் சுவை எப்படித் தெரிய முடியும்? 'ராம நாமமே கற்கண்டு' என்றார் தமிழக அடியார். 'பிபரே ராமரஸம்' என்றார் பிரம்மேந்திரர். அந்தக் கற்கண்டை — அமிருத ரசத்தை — இடையறாமல் சுவைத்தவள் சபரி.

உண்பிக்கப் பிறந்தவள், தானே உண்பாளா? அதனால்தான் ராமன், 'ஆகாரம் சிரமமின்றிக் கிடைக்கிறதா?' என்று வினவிய போது அவள் வேடிக்கை கண்டது போல் சிரித்தாள். 'லக்ஷ்மணனைக் கேள்' என்றாள்.

ஆம், லக்ஷ்மணன் கானகத்தில் போனகம் உட்கொள்ளாமலிருந்ததற்குக் காரணம் பலாதிபல மந்திரமல்ல; ராம நாம ஜபம்தான்!

நரஸி மேதா புகழும் 'ராம நாம கம் தாலி லாகி' — நாவை ராம நாமத்தில் ஒட்டச் செய்த — வைணவ வைபத்துக்குச் சபரியை வடிவமாகத் தருகிறார் கனு தேசாய்.

# வேஷங்கள்

இந்திரா பார்த்தசாரதி

## அத்தியாயம் 8

சங்கரன் வறுவலை எடுத்து வாயில் போட்டுக் கொண்டான். பிறகு சொன்னான்: ''இன்னிக்குக் காலம்பற ரமணியோட சிநேகிதர் எல்லாரும் வந்திருந்தா. சம்புராம் மகராஜ், போலோராம், உஸ்தாத் ஹமீத்கான், அவன் தங்கை ஷம்மி....''

''இதான் நீ பேச விரும்பின பெரிய விஷயமா ?'' என்றான் சுந்தரம்.

''எல்லாருக்கும் 'சந்திரா' பார்ட்டி. குதப் ரோட்டிலே போய் மாட்டிண்டுட்டோமோன்னு எனக்குச் சந்தேகம். அவ்வளவு மோசமான சூழ்நிலை!''

''அதிருக்கட்டும்! உனக்கு முன்னாலே அந்த வீட்டிலே இருந்தவரைப் பார்த்தேன், மிஸ்டர் ரகுநாதன்... அவரும் ரமணியோட விருந்து பத்தியெல்லாம் சொன்னார். இன்னும் என்னென்னமோ சொன்னார்.....''

''என்ன சொன்னார் ?''

''ரமணி ஒரு மனுஷனே இல்லே, ராட்சசன்னார். பெண்டாட்டியைக் கண் மண் தெரியாம அடிப்பானாம்.''

சங்கரனின் தம்ளர் காலியாயிற்று. இன்னும் கொஞ்சம் ஊற்றிக் கொண்டான் அவன்.

''ஹூம்.... அப்புறம் ?''

''ஒரு நாள் அவருக்குத் தாங்க முடியாத கோபம் வந்துடுத்தாம். 'போடா, நீ மனுஷனா?'ன்னு கேட்டாராம். அவரை அவன் அடிக்க வந்து, அப்புறம்தான் காலி பண்ணினாராம்.....''

''எனக்குத் தெரியாதது ஒண்ணும் நீ புதுசா சொல்லிடல்லே.''

சுந்தரம் தனக்குக் கொஞ்சம் ஊற்றிக் கொண்டான்.

''அந்தப் பையன் எழுதின கதையைப் பார்த்தியோ?''

''பார்க்கலே.... கிழிச்சுப் போட்டுட்டானாம்.....''

''நீ என்ன நினைக்கிறே? அந்தப் பையன் 'பர்வர்ட்'தானே ?''

''வாழ்க்கையிலே வாய்ப்பு இல்லாதவா எல்லாம் 'பர்வர்ட்'டா போறதிலே ஆச்சரியமில்லே!''

''எனக்கு என்ன வாய்ப்பு இருக்கு? படிப்பும் திறமையும் இருந்து என்ன பிரயோசனம்? பிள்ளைத்தாச்சிகள் எவ்வளவு பேருன்னு கணக்கு எடுக்கிற வேலை....நான் வக்கிரமாப் போயிட்டேனா ?''

''அது உனக்கு எப்படித் தெரியும் ? அதிலும் 'வக்கிரம்'ங்கிறது ஒரு 'ரிலேட்டிவ் வேர்ட்'...''

அப்பொழுது யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்டது.

சுந்தரம் கதவைத் திறந்தான். அவனுக்கு 'மெஸ்'ஸிலிருந்து சாப்பாடு வந்திருந்தது. அவன் 'டிபன் காரியரை' வாங்கி உள்ளே வைத்தான்.

''சாப்பாடு வந்துடுத்து... இங்கேயே சாப்பிட்டுட்டுப் போ....'' என்றான் சுந்தரம்.

'மெஸ்' பையன் போன பிறகு கதவைத் தாளிட்டுக் கொண்டு உள்ளே வந்தான் சுந்தரம்.

''அந்தப் பையன், கோபு இருக்கானே, அவனைப் பார்க்கிற போது எனக்குச் சில சமயம் ஒரே பயமா இருக்கு.... இன்னிக்குக் காலம்பற அவன் பல்லைக் கடிச்சிண்டு நின்ன

தைப் பார்த்தால்...'' என்று தொடர்ந்தான் சங்கரன்.

''எல்லாப் பிள்ளைகளும் அப்பாவை ஏதாவது ஒரு காலகட்டத்தில் வெறுக்காமலிருக்க மாட்டாங்கறது சைக்காலஜி...அதுவும் 'ஒடிப்பஸ் காம்ப்ளெக்ஸ்' இருந்ததுன்னு, அந்தப் பிள்ளைகள்...''

''அது இந்தப் பையன்கிட்டே ரொம்ப அதிகமா இருக்கு.... ரமணி தன் பேரிலே இருக்கிற ஆத்திரத்தைப் பையன் மேலே காட்டறான்..... இயலாமையினாலே ஏற்படற கோபத்தை, மேஜையின் மேலே குத்திக் காண்பிக்கிற மாதிரி.... பையனும் ஒரு 'இன்வாலிட்'...''

''தன் பேரிலே ஆத்திரமா?''

சுந்தரம் சிகரெட் பற்ற வைத்துக் கொண்டான். ''உனக்கு?''

''நோ... ப்ளீஸ்...''

''தன் பேரிலே ஆத்திரம்னியே ? என்ன அது?''

'' ஆமாம்.... ரமணிக்குத் தாழ்வு மனப்பான்மை.... ஒரு பேராசிரியர் பொண்ணை, தன்னைவிட அந்தஸ்திலே உயர்ந்த பொண்ணை, பொய் சொல்லிக் கல்யாணம் பண்ணிண்டதாலே ஏற்பட்ட 'காம்ப்ளெக்ஸ்'.... அவன் தரத்துக்கு வேண்டியதெல்லாம் ஷம்மியும், கும்மியுந்தான்.....''

''ஷம்மியா....?''

''ஆமாம்... அந்த உஸ்தாத் தங்கை. அவனுக்கு ராஷ்டிரபதி முன்னாலே நடனம் ஆட 'சான்ஸ்' வாங்கித் தரேன்னிருக்கான் ரமணி.''

''போடு சக்கை....''

''எக்ஸாட்லி.... ரமணி அதுதான் பண்ணிண்டிருக்கான், ஒரு அழகான பெண்டாட்டியை விட்டுட்டு... அவளை



நினைக்கிறபோது ரொம்பக் கஷ்டமா இருக்கு....''

''அநுதாபம் ரொம்ப ஆபத்தான உணர்ச்சி...'' என்றான் சுந்தரம்.

சங்கரன் காலித் தம்ளரை மறுபடியும் நிரப்பிக் கொண்டான்.

''அநுதாபம் ஆபத்தான உணர்ச்சி'' என்று சுந்தரம் கூறியது எங்கிருந்தோ ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து யாரோ சொல்லுவது போலிருந்தது.

'' ரமணியையும், அவன் பொண்டாட்டியையும் சம்பந்தப்படுத்தியே பார்க்க முடியல்லே.... அவன் அவ்வளவு 'குருட்' அவள் அவ்வளவு 'டெண்டர்'.....''

''டேய், கொஞ்சம் மெதுவாச் சாப்பிடு....'' என்றான் சுந்தரம்.

''ஐ ஆம் ஆல் ரைட்... பொய் சொல்லிக் கல்யாணம் பண்ணின் டேன்னு அவனே சொல்றான். அவனுக்கு அப்பா யாருன்னு தெரியாதாம்.... சின்ன வயசிலே இதனாலே ரொம்பக் கஷ்டப்பட்டிருப்பான் போல் இருக்கு.... அதனாலே, சமூகத்தை இப்படிப் பழி வாங்கறதா நினைச்சிண்டிருக்கான். அவன் அதிர்ஷ்டம், கோபு மாதிரி ஒரு பிள்ளை.... மடையன், வீட்டிலே ஒரு வெறுப்புணர்ச்சியை.... டைனோசோர் மாதிரி வளர்த்துண்டு.''

''இதிலே யாரைக் கண்டு பரிதாபப் படணும்? ரமணியையா, அவன் பெண்டாட்டியையா?'' என்று குறுக்கிட்டான் சுந்தரம்.

''பண்பாடு பண்பாடுன்னு சொல்லிண்டு சமூகத்தை நாற அடிக்கிற நம்மைக் கண்டு நாமேதான் பரிதாபப் படணும்.... மூணு முடிச்சுப் போட்ட சந்தர்ப்பத் தப்புக்காக, ஒருத்தரை, ஒருத்தர் வெறுத்துண்டு வாழ்க்கை முழுதும் ஆம்படையான் — பொண்டாட்டி வேஷம் போடணுமா ?''

சுந்தரம் கைகளைத் தட்டினான். ''ஹியர்! ஹியர்! அழகான பேச்சு...!''

சங்கரன் முகம் சிவந்தது.

'' அழகான பேச்சோடே விஷயம் முடிஞ்சுடல்லேடா... ஐ ஆம் டெட் சீரியஸ்...கொஞ்ச நாளாத்தான் அந்த வீட்டிலே இருக்கேன். ஆனா நம்ம சமூகத்தின் இரண்டாயிர வருஷக் கதையும் தெரிஞ்சுட்ட மாதிரி இருக்கு...''

''என்ன செய்யணுங்கிறே? ரமணியோட பொண்டாட்டி அவனை விவாகரத்து பண்ணணுங்கிறே, அவ்வளவுதானே ?''

''நம் நாட்டிலே அவ்வளவு சுலபமா முடியற விஷயமா அது? சட்டம் இருக்கு. இல்லேங்கலே. ஆனா, நாளைக்கு நீயே சொல்லுவே, 'ஆம்படையானை விட்டுட்டு, வந்துட்டா இவ'ன்னு.... நம்ப மாதிரி 'வேஷதாரிகள்' உலகத்திலே கிடையாது.... உலகம் மாயை மாயையின்னு ஜெபிச்சுத் தள்ளுவோம். குழந்தையாப் பெத்துத் தள்ளுவோம்.''

சங்கரன் மறுபடியும் காலித் தம்ளரில் ஊற்றிக் கொள்ள முற்பட்டபோது, சுந்தரம் தடுத்தான்.

''உனக்குப் போறும்னு நினைக்கிறேன். சாது மிரண்டாங்கிற மாதிரி பொழிஞ்சு தள்ளறே நீ....''

''போறுங்கிறியா, ஆல் ரைட்...'' என்று தம்ளரை ஸ்டூலில் வைத்தான் சங்கரன்.

வறுவல் கொஞ்சம் மீதியிருந்தது. அதை எடுத்து அவன் வாயில் போட்டுக் கொண்டான்.

சுந்தரமும் தன் தம்ளரைக் காலி செய்து, சங்கரனின் தம்ளரையும் எடுத்துக் கொண்டு கழுவுவதற்காக வெளியே போனான்.

அவன் மீண்டும் உள்ளே நுழைந்ததும் சங்கரன் எழுந்திருந்தான். ''சரி, நான் வரேன்.....''

''சாப்பிட்டு விட்டுப் போடா...''

''நோ... நோ... எனக்குச் சாப்பாடு வேண்டாம். பசிக்கலே....''

சங்கரன் இவ்வாறு சொல்லிக் கொண்டே வெளியில் போனான்.

''நானும் வரட்டுமா ?''

''வேண்டாம்.....''

மாடிப் படியருகே ஒரே இருட்டாக இருந்தது. சுந்தரம் அவனிடம் ஒரு 'டார்ச்'சைக் கொண்டு கொடுத்தான்.

அறுபத்தி நான்கு படிகளை எப்படிக் கடந்தோமென்று அவனுக்கே தெரியாது. விண்வெளியில் செல்லும்போது ஏற்படும் 'கனமின்மை' என்பது இதுதானோ?

கடைகளையெல்லாம் மூடியாகிவிட்டது. ஒரே ஒரு கடை மட்டும் திறந்திருந்தது. குருநானக் படம் கடையில் தொங்கிக் கொண்டிருந்தது. ஒரு வயதான சர்தார்ஜி, ஒரு பெரிய போர்வையை மேலே போர்த்திக் கொண்டு, தூக்கத்தில் ஆடிக் கொண்டிருப்பது தெரிந்தது.

பதினெட்டாம் பிளாக் அருகே ஒரு பஸ் வந்து நின்றது. அவன் முன்பு குடியிருந்த வீட்டின் அருகிலிருந்த ஒரு சிந்திப் பெண் சிரித்துக் கொண்டே இறங்கினாள். அவளுக்குப் பக்கத்தில் அவளுடைய நண்பன். அவளுக்கு இன்னும் கல்யாணமாகவில்லை என்று அவனுக்குத் தெரியும்.

அறிமுகமான முகம் மாதிரி இருக்கிறதே என்று என்னவோ அவள் ஒரு

விநாடி அவனை ஏறிட்டு நோக்கினாள். அவன் புன்னகை செய்தான். அவள் சிறிது நேரத் தயக்கத்துக்குப் பிறகு பதிலுக்குப் புன்னகை செய்தாள். யாரையும் ஏறிட்டுப் பார்க்காத இவன் ஏன் புன்னகை செய்தான் என்று அவள் யோசித்துக் கொண்டிருக்க வேண்டும். இதுவே அவள் தயக்கத்துக்குக் காரணம்.

சிந்திப் பெண்கள் அழகான பெண்கள்தாம், சந்தேகமில்லை. ஆனால் பிறந்ததிலிருந்து மஞ்சள் தேய்த்துக் குளிக்கும் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டிருந்தால், நன்றாக இருந் திருக்கும்.

மிகவும் நேரமாகி விட்டது.... சௌக்கிதார் கழியை 'டொக் டொக்' என்று சத்தமிட்டுக்கொண்டு சென்றான்.

வீடும் நிசப்தத்தில் ஆழ்ந்திருந்தது. அவன் பூட்டைத் திறந்த ஒலி மிகவும் பலமாகக் கேட்டது.

விளக்கைப் போட்டான். ரமணியின் விருந்தாளிகள் போயிருப் பார்களோ ?

'ஷூ'வை மூலைக்கொன்றாய் எறிந் தான். திடீரென்று எதைப் பற்றியும் கவலைப்படக் கூடாது என்ற ஆவேசம்.

கண்ணாடியில் முகத்தைப் பார்த் தான். கண்கள் இரத்தச் சிவப்பா யிருந்தன. தனக்குள்ளிருந்து தானே எட்டிப் பார்க்கும் அநுபவம்.

விளக்கை அணைத்து விட்டுப் படுத் தான்.

நாய் குரைத்தது. மூன்றாவது வீட்டில் ஆஸ்துமாக்காரர் ஒருவருடைய ரம்பம் அறுப்பது போன்ற இருமல்.

அப்பொழுது வராந்தாவில் விளக்கு எரிந்தது. யார் அங்கே...? ரமணியின் மனைவி. அவள் மரச் சட்டத்தைப் பிடித்துக் கொண்டு ஆகாயத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். மேக மூட்டத்தில் அவள் என்ன பார்த்துக் கொண்டிருப்பாள்....? ரமணி வீட்டில் இல்லையோ....?

இந்த நினைவு தோன்றியதும், இதயம் திடீரென்று நின்றுவிடும் போலிருந்தது.... சே... என்ன இது?

என்ன இது?... இது, இதுதான்....

அவள் எதற்காக அங்கு நின்று கொண்டிருக்கிறாள்? தெரு விளக்கின் மங்கலான ஒளியில்கூட, மரச் சட்டத் தைப் பிடித்துக் கொண்டிருந்த அவள் கைகள் வெண்மையாகத் தெரிந்தன.

தன் உடம்பு ஏன் இப்படி நடுங்கு கிறது? மனத் திரையில் பல காட்சிகள்.

''கல்லூரியில் படிக்கிற போது.... அந்தப் பெண், அவள் பேரென்ன, சரோஜா...ஆமாம் சரோஜா...பெரிய



''பையன் ஏதோ வளர்ந்து விட்டானே ஒழிய அவ னுக்குக் குழந்தை உள்ளம்தான்!''
''அதற்காக அவருக்கு அரை டிக்கட் வாங்குவதா?''

கண், கன்னத்தில் மரு. தொட்டா, அதுகூட வேண்டாம் — தொட்டுப் பார்க்கிறதா நம்ம மனசிலே நினைச் சுண்டாக்கூடப் போறும், அவ உடம்பு சிவந்து விடும். அவ ஒரு நாள் தன் சிநேகிதிகிட்டே சொன்னா... 'பாருடி, அந்த நொண்டியைப் பாருடி... அது என்னையே முழிச்சு முழிச்சுப் பார்க்கி றது...' அன்னிக்கு முழுதும் அழுதேன். நான் நொண்டி, நான் நொண்டின்னு ஸ்ரீராமஜெயம் எழுதற மாதிரி நோட் டுப் பூரா, கை வலிக்கிற மட்டும் எழுதினேன்.''

சங்கரன் கட்டிலில் எழுந்து உட் கார்ந்தான். அவள் ஆடாமல், அசை யாமல் நிற்கிறாள். பிரமையா ? சே... தான் அவ்வளவு சாப்பிட்டிருக்கக் கூடாது, சுந்தரத்தின் அறையில்.... பிரமையில்லை.... அவள்தான், அவளே தான்.... இவள் முன்னோர்களில் யாராவது ராணியாக இருந்திருப் பார்களோ ? என்ன தோற்றம், என்ன பொலிவு, என்ன கம்பீரம் !....

அவன் உடம்பு முழுதும் ஏதோ ஒரு நெருப்பு பரவிச் சுட்டெரிப்பது போலிருந்தது.

இதென்ன வேடிக்கையாக இருக்கு? எனக்குள்ளே நானே கரைஞ்சு, உருகி, வெந்து, சாம்பலாகி, மறுபடியும் மறுபடி யும் நானாக வெளிப்படற அதிசயம்? ஒண்ணுக்குள்ளே ஒண்ணு தெளிஞ்சு, ஒண்ணும் ஒண்ணும் ஒண்ணாகி.... ஐயோ, போறும் என்னை விட்டுடு.... நான் என்னையே அழிச்சிண்டுடுவேன். என்ன இது, நான் 'வெறுப்பு வெறுப்பு'ன்னு சொன்ன டைனோசோர்

எனக்குள்ளேயிருந்து புறப்பட்டு..... புறப்பட்டு வளர்ந்து, வளர்ந்து...

சங்கரன் எழுந்து வராந்தாவுக்குப் போனான். ''விளக்கை அணைச்சுடட்டுமா?'' என்றான்.

அவள் திடுக்கிட்டுத் திரும்பினாள்.

''நீங்களா ?''

'அநுதாபம் ஆபத்தான உணர்ச்சி' என்று சுந்தரம் சொன்னது, மிக அருகே, காதோடு காதாய், காதின் பேரிரைச்சலாய்க் கேட்டது.

''விளக்கை அணைக்கட்டுமா....?''

அவள் அவன் அருகில் வந்து நின்றாள். அவனை உற்றுப் பார்த்தாள்.

''உள்ளே போய்ப் படுங்க.... உங்களைப் பார்த்தால் பரிதாபமா யிருக்கு.''

''என்னையா ....? நான் நொண்டின்னு?.. நீயுமா என்னை நொண்டிங்கிறே.....?''

''உங்களுக்கு இன்னிக்கு என்ன ஆயிடுத்து? அவர் இருக்கார் உள்ளே.''

''அதுதான் உன் ஆட்சேபனையா?''

அவன் கன்னத்தில் ஓங்கி ஒன்று விழுந்தது. அதே சமயத்தில் விளக்கும் அணைந்தது. அவள் உள்ளே போய் விட்டாள். அவன் அப்படியே செயலற்று நின்றான்.

சே.... என்ன செய்து விட்டோம்? இந்த நிமிஷத்தை — கடந்துவிட்ட இந்தப் பெரு யுகத்தை — உலகத்தில் எந்தச் சக்தியால் திரும்பி வாங்கிக் கொள்ள முடியும்?

அவன் தன் அறைக்குள் சென்று கட்டிலில் விழுந்தான்....

யாரோ கதவருகே நிற்பது போல் இருந்தது. ''யாரு?'' அவன் மெதுவாகக் கேட்டான். கோபு!....

அந்தப் பையன் அடி மேல் அடி வைத்து அவனருகே வந்து நின்றான்.

''கோபுவா?''

அவன் பதில் சொல்லவில்லை. சங்கரனையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனைப் பார்க்கப் பயமாக இருந்தது.

''என்ன கோபு?''

''நீ ஒத்தைக் கால் ராட்சசன்...'' என்றான் கோபு நிதானமாக.

கோபுவுக்கு எல்லாம் தெரிந்து விட்டது! ''நீ அயோக்கியன்...ஒத்தைக் கால் ராட்சசன்....''

சங்கரன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டான். கோபு அவன் முகத்தைக் கோபத்துடன் திருப்பினான்.

''என்னைப் பாரு.... யார் மூஞ்சி அவலட்சணமா யிருக்கு பார்ப்போம்.''

''என் மூஞ்சிதான். சரி, உள்ளே போ....''

''எங்கப்பாவைக் கொல்லப் போறேன். அப்புறம் உன்னையும்....''

''உங்கப்பாவையா?''

''ஆமாம்... அவரால்தானே இவ்வளவும்.....''

திடீரென்று அவன் கூச்சலிட்டான். ''அவரால்தானே இவ்வளவும்....''

கோபு ஆத்திரத்துடன் உள்ளே ஓடினான். சங்கரன் எழுந்திருந்தான். அவனைத் தொடர்வதா, வேண்டாமா?

அப்பொழுது கோபுவின் அம்மா குரல் கேட்டது.... ''கோபு, கோபு!''

அவள் குரல் ஆவேசமாய் ஒலித்தது. ''கோபு!'' அவள் அடித் தொண்டையில் கத்தினாள். சங்கரன் கட்டிலிலிருந்து இறங்கி ஓடினான்.

ரமணி நன்றாகக் குடித்து விட்டுப் படுத்திருந்தான் போலிருக்கிறது. கோபு அவன் மென்னியைப் பற்றி அழுத்திக் கொண்டிருந்தான். ரமணியின் கண்கள் திகைப்பில் திறந்தபடியே கிடந்தன. இந்தப் பையனுக்கு இத்தனை அசுரத்தனமான பலம் எங்கிருந்து வந்தது ?

கோபுவின் அம்மா அவனைப் பின்புறமாக இழுத்துக் கொண்டிருந்தாள். ஆனால் அப்பொழுதும் அவன் ரமணியின் கழுத்தை விடவில்லை.

சங்கரன் வேகமாகப் பாய்ந்து கோபுவை இழுத்துத் தள்ளினான்.

கோபு சங்கரன் மீது பாய்ந்தான். அப்பொழுது அவன் அம்மா குறுக்கே வந்து நின்றாள். ''கோபு... சும்மா இருக்கப் போறியா இல்லையா....? நான் செத்துப் போகணுமா ?''

கோபு கண்களை மூடிக் கொண்டு அம்மாவைக் கட்டிக் கொண்டான். அவன் அழத் தொடங்கினான்.

சங்கரன் ரமணி மூக்கருகே கைவைத்துப் பார்த்தான். மூச்சு வந்து கொண்டிருந்தது. ''டாக்டரைக் கூப்பிடணுமா?'' என்றான் சங்கரன்.

''வேண்டாம்.... நீங்கள்....''

''நான் புறப்பட்டுப் போறேன்....'' அவன் கீழே குனிந்து கொண்டே சென்றான்.

ரமணியின் உடம்பு அசைந்தது. ஆனால் கண்களில் பேயைக் கண்ட மிரட்சி.

சங்கரன் தன் அறைக்குள் நுழைந்தான்.... சற்று நேரத்துக்குப் பின்— 'யார் நடுராத்திரியில் இப்படி வந்து கதவைத் தட்டுகிறார்கள்?' என்று அலுத்துக் கொண்டே கதவைத் திறந்தான் சுந்தரம்.

சங்கரனைக் கண்டதும் அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ''என்னடா, சாவி தொலைஞ்சு போச்சா....?'' என்று கேட்டான்.

''இல்லே மனம்..... இங்கே படுக்கலாமா இல்லையா?'' என்று சொல்லிக் கொண்டே கட்டிலின் மீது உட்கார்ந்தான் சங்கரன். **(முற்றும்)**

# எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதைப் போக்க ஒரே ஒரு ஸாரிடான் போதும்!

தலைவலி பலவிதம். எந்தக் காரணத்தால் உங்களுக்குத் தலைவலி வந்தாலும், அதை விரைவில் போக்க ஒரே ஒரு ஸாரிடான் சாப்பிட்டால் போதும். ஸாரிடானில் சேர்க்கப் பட்டுள்ள கலவைப் பொருள்கள் தலைவலி, உடல்வலி மற்றும் பல்வலியுடன் கூடவே அனுபவமாகும் சோர்வையும் போக்குகின்றன; மற்றும் இதமளித்து புத்துணர்ச்சியும் ஊட்டுகின்றன. அதுவே ஸாரிடானின் தனிச் சிறப்பு!

**ஸாரிடான்**

ரோஷ்




HTA-VT-8420

'ரோஷ்' தயாரிப்பு ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்

## அத்தியாயம் 7

# தீராத விளையாட்டு

கி. அழகிரிசாமி

கல்யாணமாகிக் கணவன் வீட்டுக்கு வரும் ஒரு பெண், பிறந்த வீட்டிலிருந்து ரொக்கப் பணமும் சீர் வரிசைகளும் மட்டும் கொண்டு வருவதில்லை. தன் வீட்டின் பாரம்பர்யம், பண்பாடு, இன்ப துன்பங்களால் பாதிக்கப்பட்ட உள்ளம், பாதிக்கப்பட்ட உடம்பு இப்படி எத்தனையோ கொண்டு வருகிறாள். நிர்மலாவும் அந்த விதமாகத்தான் எதை எதையோ கொண்டு வந்தாள்.

புது வாழ்வையும், பாக்கியத்தையும் கண்டு அவள் மிரண்டாள். ரங்கராஜன் அதைக் கவனித்தான். அப்போது அவளைக் கேலி செய்யாமல் அனுதாபத்துடன் ஒவ்வொரு வசதியையும் ஒவ்வொரு சந்தோஷத்தையும் அவளுக்கு அறிமுகப்படுத்தி, வளமான வாழ்வுக்கு அவளைத் தகுதியுள்ளவளாகச் செய்ய முயன்றான். அவளுக்கு நகைகள் செய்து போட்டான். பட்டுடைகள் வாங்கிக் கொடுத்தான். கையில் கடிகாரமும் கட்டி விட்டான். அடிக்கடி அவளுக்குத் தலைவலி வருவதை — அதுவும் அவள் பிறந்த வீட்டிலிருந்து கொண்டு வந்தது தான். — கவனித்து டாக்டரிடம் அழைத்துச் சென்று சில மருந்துகளும் டானிக்குகளும் வாங்கிக் கொடுத்தான்.

அவர்கள் தனிக் குடித்தனம் செய்த வீடு சிறு வீடாக இருந்தாலும் நவீன முறையில் கட்டப்பட்ட புது வீடு. நிர்மலாவுக்கு அது அரண்மனை போல் இருந்தது. ரங்கராஜனின் பண வசதியை மட்டுமின்றி, அவனுடைய அழகையும் கண்டு அவள் பிரமித்தாள். அவளுடைய சொந்த அக்காள், முத்துக்குமாரின் மனைவி, இன்னும் அக்கம் பக்கத்தில் உள்ள வயது முதிர்ந்த ஸ்திரீகள் — இவர்களெல்லாம் அவளுடைய பாக்கியத்தை அவளிடமே சொல்லிச் சொல்லி அவளைச் சந்தோஷத்தில் ஆழ்த்தினார்கள்.

ரங்கராஜன் பணக்காரன்; படித்தவன்; மன்மதனைப் போல் இருக்கிறான். மனசும் தங்கமாக இருக்கிறது. தன் பெற்றோர்களையும் உற்றோர்களையும்கூடப் பொருட்படுத்தாமல் அவளுக்கு வாழ்வளித்திருக்கிறான் அவன்.

அவளோ அழகும் இல்லை; வாழ்நாளில் ஒரு நாள் கூடப் பசி தீரச் சாப்பிட்டு, ஆசை தீர உடுத்தியவள் இல்லை. இப்படிப் பட்டவளுக்கு இந்தப் பாக்கியம் கிடைக்க முன் ஜன்மத்தில் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

இப்படி ஒவ்வொருவருமே அவளிடம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதைக் கேட்டுக் கேட்டுப் பூரித்தாள் நிர்மலா. இந்த விஷயம் ரங்கராஜனுக்கும் தெரிந்து அவனும் சந்தோஷப்பட்டான்.

வாரத்தில் நான்கு நாட்களாவது அவன் தன் பெற்றோர்களைப் போய்ப் பார்த்துவிட்டு வரத் தவறியதில்லை. இரண்டே மாதங்களில் இந்தத் தனிக் குடித்தனம் ஒரு பைத்தியக்காரத்தனமாக அவனுக்குத் தோன்றி விட்டது. அவன் பெற்றோர்களுக்கும் தோன்றி விட்டது. இனி உலகத்தில் யாருக்காகப் பயந்து கொண்டு இப்படித் தனித் தனியாக வாழ வேண்டும் என்று யோசிக்கத் தலைப்பட்டார்கள். மூன்றாவது மாதத்திலேயே பெற்றோர்களுடன் வந்து சேர்ந்து கொண்டான் ரங்கராஜன். இந்த ஐக்கியத்தை உண்டு பண்ணியதில் முத்துக்குமாருக்குப் பெரும் பங்கு உண்டு.

பாலுவின் கடன்களை — மொத்தம் சுமார் ஆயிரத்து ஐந்நூறு ரூபாய்க்குள்ளாகவே இருந்தன — ரங்கராஜனே பணத்தைக் கொடுத்துத் தீர்த்தான். அதற்கு அவன் பெற்றோர்களும் மறுப்புச் சொல்லவில்லை. அதன்பிறகு அவன் தன் எதிர்கால வாழ்க்கையைப் பற்றி யோசிக்கத் தொடங்கினான். நடராஜ முதலியார் தம் காலம் முடிந்துவிட்டது என்ற துறவு மனப்பான்மை



யுடன் அவன் எந்த முயற்சியில் ஈடுபட்டாலும் தம் கையில் இருக்கும் ரொக்கத்தையும், கிராமத்தின் சொத்துக்களையும் ஒரு காசுகூடத் தமக்கு என்று எடுத்துக் கொள்ளாமல் அவன் கையில் ஒப்படைக்கத் தயாராகிவிட்டார். அவன் வக்கீலாகத் தொழில் செய்ய வேண்டும் என்று தாம் வைத்திருந்த ஆசையையும் அறவே கைவிட்டு விட்டார்.

ரங்கராஜன் ஏதேனும் ஒரு தொழிலையோ வியாபாரத்தையோ தொடங்கலாம் என்று நினைத்து அதற்கும் ராமலிங்கம் பிள்ளையின் ஆலோசனையையே நாடுவது என்று முடிவு செய்து வைத்திருந்தான்.

கல்யாணமாகி மூன்று மாதங்கள் கழித்து ராமலிங்கம் பிள்ளையை அவன் தேடிப் போனான். முக மலர்ச்சியோடு போன அவனை அவரும் முகமலர்ச்சியோடு வரவேற்றார். அவன் தன்னுடைய விருப்பத்தைத் தெரிவித்து, ''நீங்கள் தான் எனக்கு ஒரு வழியைக் காட்ட வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டான்.

அவர் அதற்கு மனப்பூர்வமாகச் சம்மதித்தார். அப்புறம் அவன் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, அவருடைய கம்பெனியிலேயே சில காலம் அவன் பயிற்சி பெறுவதற்கும் இசைந்தார்.

விஜயாவைப் பற்றி அதுவரையில் இருவரும் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவனுடைய பெற்றோர்களின் க்ஷேம லாபங்களை மட்டும் அவர் விசாரித்துத் தெரிந்து கொண்டு, இரண்டு குடும்பங்களும் மீண்டும் ஒன்றாக இணைந்து விட்டதற்காகச் சந்தோஷம் தெரிவித்தார். அத்துடன் அவன்

# It's NEW

# Caltex Custom Five Star the best motor oil your money can buy

**THIS NEW MOTOR OIL EATS UP THE DIRT THAT WEARS OUT YOUR ENGINE**

★ **It gets dirty—so your engine won't**
As it flows around your engine, new Custom motor oil scrubs off varnish and sludge and abrasive particles. It cleans up the bearing surfaces. Unclogs the oil passages. Washes away, and keeps away, the harmful deposits that can make your engine old before its time.

★ **Oilier at all engine temperatures**
Even when your engine is cold in the early morning, and an ordinary motor oil would be thick and sluggish, new Custom flows easily over the bearing surfaces. Makes starting easier, cruising smoother—protects your engine, not just against changes in climate, but fully over all its operating temperatures.

★ **Armour-plates the inside of your engine**
New Custom motor oil has special zinc-phosphorous additives that bond the oil to the metal itself. They make sure that no bearing is ever without a film of oil, no internal metal surface is ever without protection from acid, rust and corrosion.

★ **Worth its weight in performance**
Your car will run better and easier with new Custom motor oil. This can give you better acceleration, more miles per litre. Your car will also last longer, with less wear and less trouble. And this can save you a great deal of money.

★ **It's the world's most advanced motor oil**
Developed by Caltex research, tested in all kinds of engines and climates by Caltex's world-wide operations, new Custom Five Star motor oil meets the lubrication requirements of all cars, exceeds all previous standards, is the most efficient and comprehensive lubricating oil that modern technology can devise.

*Spend a little—to save a lot. Change to the best motor oil your money can buy.*



**NOW...AT ALL CALTEX STATIONS**

CALTEX (INDIA) LIMITED

விடைபெற்றுக் கொண்டு வந்து விட்டான்.

அரசடி விநாயகர் கோவில் தெருவுக்கு வந்த பிறகு, ரங்கராஜன் மற்றொரு ஜீவனிடம் — தாயாரிடம்தான்— அன்பைப் பொழிவதைப் பார்த்த நிர்மலாவுக்கு அது புது அனுபவமாகவும் அவ்வளவாகப் பிடிக்காத அனுபவமாகவும் இருந்தது. சில மாதங்களுக்குள்ளாகவே அவளுடைய மனப்பான்மை தலைகீழாக மாறிவிட்டது.

அந்த வீட்டின் மரியாதைகளும், பழக்க வழக்கங்களும் அவளை மூச்சுத் திணறச் செய்தன. வீட்டில் யாருமே அதிகம் பேசுவதில்லை. எப்பொழுதும் ஒரே அமைதியாக இருந்தது. அக்கம் பக்கத்து வீடுகளுடன் தொடர்பே இல்லை. திண்டுக்கல்லில், அந்தக் கஷ்டத்திலும் சுயேச்சையாய்ப் பறந்து திரிந்தது போலவும், இங்கே வந்து ஒரு கூண்டுக்குள் அடைபட்டுக் கிடப்பது போலவும் அவள் மனசுக்குப் பட்டது. அவள் சிறு வயதிலிருந்தே கல்யாணமாகும்வரை அனுபவித்த சந்தோஷங்கள் அனைத்துமே இங்கே இல்லை. மதுரையில் இத்தனை சினிமாக்கள் நடக்கும்போது தன்னை வாரத்தில் ஐந்து நாட்களாவது சினிமாவுக்கு அழைத்துக் கொண்டு போகக் கூடாதா? பணமா இல்லை? அந்த நகரில் எத்தனை பலகாரக் கடைகள் உண்டு? ஒரு நாளாவது ஒரு பக்கடாப் பொட்டலமாவது வாங்கிக் கொண்டு வந்து பிரியத்தோடு கொடுத்தானா?

கடைசியில் அவனுடைய அழகிலேயே அவள் குறை காணத் தொடங்கி விட்டாள். அவன் ஆண்பிள்ளையாக இருந்தும் மீசை வைத்துக் கொள்ளாமல் இருப்பது எதற்கு? மீசை இல்லாவிட்டாலும் அழகாகத்தான் இருக்கிறான் என்பதை அவள் மனம் மறுக்கவில்லை. ஆனால் அந்த அழகு சிலையிலோ சித்திரத்திலோ காணும் அழகாக, தொட்டுப் பழகி அனுபவிக்க முடியாத அழகாக இருந்தது. அதைப் பார்த்துப் பிரமிக்க முடிந்ததே ஒழிய, அனுபவிக்க முடியவில்லை. முன் பின் பார்த்துப் பழகியிராத அந்த அழகின் புதுமையும் கவர்ச்சியும் மறைந்து, வேறு ஏதோ அழகுக்காக அவள் உள்ளம் ஏங்கியது. ஒரு நாள் அவனிடமே, ''நீங்கள் மீசை வைச்சுக்கோங்களேன். நல்லா இருக்கும்'' என்றுசொல்லியும்விட்டாள்.

''ஏன், நான் இப்போ நல்லா இல்லையா, நிர்மலா ?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான் ரங்கராஜன்.

அவனுடைய சிரிப்பைக் காண அவளுக்கு ஆத்திரமாகவே இருந்தது.

''ஏன் சிரிக்கிறீங்க?''

''இப்படி எனக்கு யாருமே இது வரையில் யோசனை சொன்னதில்லை!''

அவள் ஒன்றும் சொல்லாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். இதிலிருந்து அவளுடைய குறை குணங்கள் வெளிப்படையாகவே தெரியத் தொடங்கி விட்டன. அவளுக்கு ஏதோ பெரிய மனக்குறை இருக்கிறது என்பதை அவனும் உணர்ந்துகொண்டான். அதன் காரணமாக அவளிடத்தில் அவனுக்கு அனுதாபம் பன்மடங்காகப் பெருகியது. 'காட்டை விட்டு வந்தது காட்டுப் பிராணிக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். இன்னும் கொஞ்ச காலம் போனால் சரியாகப் போய் விடும்' என்று நினைத்துக் கொண்டான். ஆனால் அதற்குப் பிறகு அவள் செய்த இரண்டு காரியங்கள் அவனுக்குக் கோபத்தையே உண்டுபண்ணி விட்டன.

இரண்டு முறை சிவலிங்கத்தோடு அவனைப் பார்க்க மதுரைக்கு வந்த பாலு, மூன்றாவது முறை தனியாக வந்தான். அவன் தரித்திரக் கோலத்தில் வந்து நிற்பது அவளுடைய பூர்வாசிரமத்துக்குச் சாட்சி சொல்வது போல் இருந்தது. ரங்கராஜனுடன் சமத்துவம் கொண்டாடத் தொடங்கிவிட்ட சமயத்தில் , அவன் வந்து தன்னைப் பழையபடியும் ஏன் அதள பாதாளத்தில் இழுத்துப் போட வேண்டும் என்று அவள் கோபாவேசம் கொண்டு விட்டாள்.

''ஏன் இங்கே ஓடி ஓடி வர்றே, ஒரு காரியமும் இல்லாமே? இப்படி நீ சாப்பாட்டுக்கு வந்து உட்கார்ந்துக்கிட்டா இவங்க உன்னை மதிப்பாங்களா? இல்லை, என்னைத்தான் மதிப்பாங்களா? பேசாமல் ஊரைப் பார்த்துப் போய்ச் சேரு'' என்று ஈவிரக்கமில்லாமல் பேசி அவனை விரட்டினாள். அதே மூச்சில் ரங்கராஜனிடம் வந்து, ''எங்க அண்ணனாயிருந்தாலும் சொல்றேன். அவருக்கு ரொம்ப இடம் குடுத்திடாதீங்க. இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்குகிற ஆசாமி'' என்றாள்.

அவனுக்குக் கோபம் வந்து முகம் சிவந்துவிட்டது. ''நிர்மலா! எனக்குத் தெரியும், எதைச் செய்யணும்னு. நீ ஒண்ணும் சொல்ல வேண்டாம், போ.''

இதைக் கேட்டதும் அவளுக்கு அழுகையும் வந்தது, தலை வலியும் வந்து விட்டது. போய்ப் படுத்து விட்டாள்.

மற்றொரு நாள், அவள் அந்தப் பைத்தியக்காரனைத் திட்டி விரட்ட முயன்றாள். ''ஏண்டா, இதென்ன

மடமா, சத்திரமா? எங்கேயாவது போய்த் தொலையேன். தினம் தினம் உனக்கு ஆக்கிப் போடத்தான் இங்கே இருக்கிறேனா?''

நிர்மலாவின் கூச்சலைக் கேட்டு ரங்கராஜன் கீழே இறங்கி ஓடி வந்தான். ஜானகியம்மாள் வாயை இறுக மூடிக் கொண்டு பைத்தியக்காரனுக்குச் சாதம் போட்டுக் கொண்டிருந்தாள்.

ரங்கராஜன் கோபம் பொறுக்காமல் நிர்மலாவின் கையைப் பிடித்து, ''நீ உள்ளே போ'' என்றான்.

அவள் சினத்தோடு அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

''இனிமேல் நீ அவன் வர்றப்போ வெளியிலேயே வர வேண்டாம். உன் கிட்டே அவன் பிச்சை கேட்கல்லே'' என்று சொன்னான்.

அவள் தன் கையை விடுவித்துக் கொண்டு வேகமாக உள்ளே போய் விட்டாள்.

அம்மாவின் எதிரே நிற்கவே அப்போது அவனுக்கு அவமானமாக இருந்தது. அந்த அம்மாளோ அமைதியாகத் திரும்பி வந்து, ''ராஜா! ஏன் கோபப்படறே? உள்ளே போ'' என்று சொல்லித் தானும் உள்ளே போய் விட்டாள்.

## அத்தியாயம் 8

நிர்மலாவின் அதிருப்தி வரவர அதிகமாகிக் கொண்டே வந்தது. அவள் பிறந்து வளர்ந்த சூழ்நிலைக்கும், இங்கு நிலவிய சூழ்நிலைக்கும் இடையே இருந்த வேற்றுமை மலைக்கும் மடுவுக்குமாக இருந்தது. வீட்டில் எப்போதும் நிலவும் அமைதியே அவளுக்குப் பெரிய தொல்லையாகப் போய்விட்டது. அவளுடைய விருப்பு வெறுப்புகளைக் கேட்கும் போதெல்லாம் ரங்கராஜன் லேசாகச் சிரிப்பது அவளுக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. இருபத்து நான்கு மணி நேரமும் முன் பின் தெரியாத அந்நியர்களின் மத்தியில் வசிப்பது போன்ற உணர்ச்சி அவளுக்கு ஏற்பட்டது. ரங்கராஜனும் ஜானகியம்மாளும் அவளிடம் அன்பாகவே நடந்து கொண்டார்கள் என்றாலும், அந்த மாதிரி அன்பு அவளுக்குப் புரியாத ஒன்றாக இருந்தது. அவர்கள் தங்கக் கிண்ணத்தில் தேவாமிர்தத்தைக் ஊற்றிக் கொடுத்தார்கள். அவளுக்கோ உள்ளங்கையில் வெல்லப் பாகை வைத்துக் கொண்டு சுவைக்க வேண்டும் என்று ஆசை. இந்த நிலையில் அவளுக்குப் புக்ககம் ஒரு சிறைச்சாலையாக இருந்ததில் வியப்பு ஒன்றும் இல்லை.

சில வாரங்களுக்குப் பிறகு நிர்மலாவின் தாயார் பொன்னம்மாளும், ஹோட்டல்காரன் சிவலிங்கமும் திண்டுக்கல்லிலிருந்து வந்தார்கள். அவன், சொந்த வேலையாக மதுரைக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தபோது, அவனைத் துணையாகக் கொண்டு அந்த அம்மாள் தானும் மதுரைக்கு வர விரும்பினாள் என்றும், எனவே அவளை அழைத்துக் கொண்டு வந்ததாகவும் சொல்லிவிட்டு அவன் போய்விட்டான். பொன்னம்மாள் அந்த வீடு எப்படி, வீட்டிலுள்ளவர்கள் எப்படி என்றெல்லாம் ஆராய்ந்தாள். மகள் துரும்பாக மெலிந்து விட்டதைப் போலவும் அவள் கண்களுக்குப் பட்டது. அவள் தலைவலியினால் அடிக்கடி கஷ்டப்படுவதாகவும் நல்ல டாக்டரைக் கொண்டே சிகிச்சை செய்து வருவதாகவும் ஜானகியம்மாள் சொன்னாள். இதைக் கேட்டுப் பொன்னம்மாள் மிகவும் சந்தோஷமே அடைந்தாள்.

அன்று மாலை நிர்மலா தன் தாயாருடன் கோவிலுக்குப் புறப்பட்டாள். அப்பொழுது ஜானகியம்மாள், ரங்கராஜன் வெளியிலிருந்து வந்த பிறகு அவனையே அழைத்துக் கொண்டு போகச் சொல்வதாகச் சொன்னாள். அதுதான் மரியாதையாக இருக்கும் என்பது அவளது நினைப்பு. ஆனால் நிர்மலா கேட்கவில்லை. ''அவர் எப்போ வருவாரோ? நாங்க முதல் முதல்லே கோவிலுக்குப் போறதை ஏன் தடுக்கிறீங்க?'' என்று சொல்லிக் கண்ணீர் விட்டு அழவும் செய்தாள். ஜானகியம்மாளுக்குக் கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டது போல் ஆகிவிட்டது. நிர்மலா எதற்காக அழ வேண்டும் என்றே புரியவில்லை. பொன்னம்மாளும் ''எதுக்கடி அழறே?'' என்று கேட்டாள்.

''என் தலையெழுத்து அழறேன்'' என்று சொல்லிவிட்டு முகத்தை மூடிக் கொண்டு நிர்மலா விம்மி விம்மி அழத் தொடங்கி விட்டாள்.

ஜானகியம்மாள் நிலைமை புரியாமலும், மனக் கஷ்டம் தாங்காமலும், ''நிர்மலா, அழாதேம்மா. கோவிலுக்குப் போறப்போ அழலாமா? நான் ஒண்ணும் தடுக்கல்லே. அவன் வந்தால் துணையா யிருக்குமே என்கிறதுக்காகத்தான் சொன்னேன். நீ மகராஜியாய் உங்கம்மா கூடக் கோவிலுக்குப் போயிட்டு வா'' என்று சொல்லிவிட்டு உள்ளே போனாள்.

தாயும் மகளும் கோவிலுக்குப் போனார்களே யொழிய அம்பாளைத் தரிசனம் பண்ண வேண்டும் என்ற

ஞாபகம் இருவருக்குமே இல்லை. மகளின் துயரம் என்ன என்பதைக் கேட்டறிய வேண்டும் என்பதிலேயே பொன்னம்மாள் குறியாக இருந்தாள். நிர்மலாவும் தன் கதையைச் சொல்வதற்காகத்தான் தாயாரை அங்கே அழைத்துக் கொண்டு வந்தாள்.

"உன்னைக் கொடுமைப்படுத்துறாங்களாடி? எதுக்கு அப்படி அழுதே?" என்று கேட்டாள் தாயார்.

உடனே நிர்மலா இரும்பவும் ஒரு முறை கேவிக் கேவி அழுதாள். பிறகு ஒருவாறு தேறுதல் பெற்று, "எனக்கு என்னன்னே சொல்ல முடியல்லேம்மா. தெரியாத் தனமா ஜெயிலுக்குள்ளே வந்து மாட்டிக்கிட்ட மாதிரி இருக்கு. என்னை யாரும் அடிக்கல்லே; வையலே. ஆனால் மனுஷான் துணையில்லாமல் நடுக் காட்டிலே இருக்கிற மாதிரி இருக்கு. என்கூட யாரும் எதுவும் பேசறதில்லே. அவங்களாக்கூட ஒருத்தருக்கொருத்தர் பேசிக்கிறாங்களான்னு அதுவும் கிடையாது. இவங்க சொந்தக்காரங்கன்னு சொல்லி யாரும் இது வரையிலே வீட்டுக்கு வந்தது கிடையாது..." என்று நிர்மலா சொல்லிக் கொண்டிருக்கும் போதே பொன்னம்மாள் எரிச்சல் தாங்காமல், "இதுக்குத்தான் அழுதாயாடி நீ? நான் என்னமோ ஏதோன்னு பயந்துக்கிட்டில்ல இருந்தேன்....! அடச் சீ, துப்புக் கெட்ட கழுதை!" என்று கடிந்து கொண்டாள்.

நிர்மலா மிகவும் ஆக்ரோஷத்துடன், "நான் படுற கஷ்டம் உனக்கு எங்கே தெரியும்? அந்தப் படுபாவி பாலு சண்டாளன் என்னை இருந்திருந்து இங்கேயா கொண்டாந்து தள்ளணும்? உனக்குத் தெரியுமா அம்மா, இங்கே அக்கம் பக்கத்திலே உள்ள ஒவ்வொரு பொம்புளையும் என்னை எவ்வளவு கேவலமாப் பேசறா என்பது?" என்று கேட்டாள்.

"உன்னை எதுக்கடி கேவலமாப் பேசணும்? எவள் அப்படிப் பேசறா? அப்படி என்ன பேசறாங்க?"

"என் மூஞ்சி நல்லா இல்லையாம். நான் கறுப்பாம். நொண்டியாம். இப்படிப்பட்ட புருஷன் கிடைச்சது எப்படின்னு அவங்களாலே நம்பவே முடியல்லியாம். இப்படி ஒருத்தியா, ரெண்டு பேரா? ஒரு நாளா ரெண்டு நாளா? இன்னிக்கு வரைக்கும் எல்லா நாய்களும் பேசுது. இப்படிச் சொல்லுக் கேட்கவா நான் பெண்ணாப் பொறந்தேன்? இதைவிடக் கலியாணம் இல்லாமலே திண்டுக்கல்லிலே எவ்வளவோ சந்தோஷமாய் இருந்



"தினமும் காலேஜ் போக பஸ்ஸில் இடம் பிடிப்பது கஷ்டமாக இருக்கு. அதனாலே அப்பாவிடம் ஸ்கூட்டர் கேட்கலாமா? காரே வாங்கித் தரச் சொல்லட்டுமா?"

"லாரி வாங்கித் தரச் சொல்லடி! புத்தகங்கள் எடுத்துப் போகச் சௌகரியமாக இருக்கும்."

திருப்பேனே!" என்று சொல்லி நிர்மலா கண்ணீர் வடித்தாள்.

அப்பொழுது பொன்னம்மாள் "ஊர்க்காரிகள் இப்படிப் பேசறப்போ உன் மாமியார் ஒண்ணும் தடுத்துச் சொல்ல மாட்டாளா? சந்தோஷமாக் கேட்டுக்கிட்டு இருக்கிறாளா— தேன் குடிச்ச நரி மாதிரி?" என்று கேட்டாள்.

"மாமியாரா? அதை ஏன் கேட்கிறே? அவ ஒரு பேசாமடந்தை. இடி விழுந்தாலும் வாயைத் திறக்க மாட்டாள். தடுத்துச் சொல்றதாவது? அவள் அப்படி இருக்கப் போய்த்தான் ஊர் நாய்களுக்கு இளப்பமா யிருக்கு."

"நானு இருந்தா ஒவ்வொருத்தி வாயையும் பிடிச்சுக் கிழிச்சிருப்பேன்" என்று சொன்னதோடு எப்படிக் கிழிப்பாள் என்பதை அபிநயம் பிடித்தும் காட்டினாள், பொன்னம்மாள். அப்புறம், "நிர்மலா, நீ வீட்டுக்கு வாடி. நான் ஒவ்வொருத்தியையும் தலை மயிரைப் பிடிச்சு ஒரு ஆட்டு ஆட்டிட்டு வர்றேன். அப்படி என்ன வாய்க் கொழுப்புன்னு கேட்கிறேன். அடி செருப்பாலேன்னுனும்! பொன்னம்மா மக அவ்வளவு இளப்பமாப் போயிட்டாளா? ஏஹை!...." என்று ஓரேயடியாச் சீறிக் கொக்கரித்தாள்.

தாயாரின் கோபத்தையும் வசவுகளையும் பார்த்து நிர்மலாவுக்கு மனம் குளிர்ந்தது. சந்தோஷம் தாங்கமுடியவில்லை. அந்தப் பாஷையைக் கேட்ட

தும், அவளுக்குச் சொந்த வீட்டில் இருப்பது போன்ற உணர்ச்சி ஏற்பட்டதுதான் காரணம்.

''இதையெல்லாம் உன் புருஷன் கிட்டே நீ சொல்லல்லியா?'' என்று கேட்டாள் பொன்னம்மாள்.

''சொல்லிட்டால், தலையைச் சீவிப் போடுவாராக்கும், ஒவ்வொருத்தியையும்! ஆம்பிளைச் சிங்கம் பாரு! சும்மா இரு.''

''என்னடி அப்படிச் சொல்றே?''

''அவரைப் பார்த்தா முதல்லே ஆம்பிளை மாதிரி இருக்கா? அந்தப் பொட்டை மூஞ்சியும், பொட்டைச் சிரிப்பும்! அது ஒரு பொம்மை. அந்த பொம்மையைப் பார்த்ததும் மயங்கினேன் பாரு, என் புத்தியைச் செருப்பாலே அடிக்கணும்!...''

தாயும் மகளும் தங்கள் வீட்டுப் பாஷையில் மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கிக் கொண்டு பேசத் தொடங்கினார்கள்.

பொன்னம்மா மனம் குமுறிக் கொண்டு, ''நல்ல இடம்னு நினைச்சதுக்கு இப்படியா வந்து சேரணும்? என்ன எழவோ, உன் தலை எழுத்து இப்படி இருந்திருக்கு! நான் நினைச்சு வந்ததும், நீ இருக்கிற இருப்பும்... என்னத்தைச் சொல்ல?'' என்று தலையில் அடித்துக் கொண்டாள்.

''நீ என்னம்மா நினைச்சு வந்தே?''

''உன்னைப் பார்த்துட்டு, ஒரு நூறு ரூபாயாவது வாங்கிக்கிட்டு மணப்பாறைக்குப் போகலாம்னு நினைச்சி வந்தேன். உன் அக்காளைப் பார்த்து எத்தினி நாளாச்சு....!''

''நூறு ரூபாய் என் கையிலே ஏதம்மா?''

''அவ்வளவுக்குக்கூட நீ சேர்க்கல்லியா? வாழ்ந்தாப்பலேதான்! நீயும் ஒரு பொம்பிளையா? அட, உன் கையிலே இல்லாட்டாலும் மாப்பிள்ளை கிட்ட வாங்கிக் குடுக்கிறது. அதுக்குக்கூடவா துப்பில்லே? வேறொருத்தியா யிருந்தால் இதுக்குள்ளே புருஷனைப் பம்பரமா ஆட்டியிருப்பாள்....''

பொன்னம்மாள் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும்போது, சிவலிங்கம் அங்கு வந்து சேர்ந்தான்.

''அதுக்குள்ளே வந்துட்டீங்களா? சோலி எல்லாம் முடிஞ்சுதா? ஆறு மணிக்கு மேலேதானே இங்கிட்டு வர்றதாச் சொன்னீங்க!'' என்று ஆச்சரியத்தோடு கேட்டாள் பொன்னம்மாள்.

சிவலிங்கம் ஒரு பதிலும் சொல்லாமல் நிர்மலாவையே புன்னகை பூத்த முகத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவளும் அவனுடைய கரு மேனியையும், கருப்பு மீசையையும், கருட்டை முடியையும், குங்குமப் பொட்டையும், பளபளக்கும் பட்டுச் சட்டையையும், இரண்டு கைவிரல்களிலும் கிடக்கும் ஆறு மோதிரங்களையும், மிகப் பெரிய ஆகிருதியையும் பார்த்து, அந்தப் பார்வையிலேயே லயித்திருந்தாள்.

சிவலிங்கம் இரண்டு நிமிஷம் தன்னை மறந்து நின்றுவிட்டு, ''நீங்க பேசிக்கிட்டிருங்க. நான் ஒரு நிமிஷத்திலே வந்துடுறேன்'' என்று சொல்லிவிட்டு வெளியே போனான்.

நிர்மலா உடனே ஒரு பெருமூச்சு விட்டு, ''இவர் இல்லேன்னா நாம்ப செத்துப் போயிருப்போம்'' என்றாள்.

''சந்தேகம் வேறேயா? ஒவ்வொரு சமயத்திலே இந்த மகராசன் வந்து குடுத்து உதவி யிருக்கல்லேன்னா, நம்ப கதி என்ன ஆகியிருக்கும்? உங்க அண்ணன் சம்பாதிக்கிற பிச்சைக் காசை நம்பியிருந்திருந்தால், இதுக்குள்ளே, நாம்ப எமலோகம் போயிருப்போம்'' என்றாள் பொன்னம்மாள்.

சிவலிங்கத்தைப் போன்ற ஓர் உபகாரியும், ஒரு குணக் குன்றும், ஓர் ஆணழகனும் இந்த உலகத்தில் இருக்க முடியாது என்று தாயும் மகளும் பரவசத்தோடு பேசிக்கொண்டிருந்தார்கள்.

அரை மணி நேரத்துக்குள் சிவலிங்கம் திரும்பி வந்தான். வந்ததும், உட்காராமலே நிர்மலாவின் கையில் இரண்டு காகிதப் பைகளைக் கொடுத்தான். நிர்மலா ஆவலோடு பைகளை வாங்கித் திறந்து பார்த்தாள். ஒரு பையில் அல்வாவும் காராசேவும் இருந்தன. மற்றொன்றில் பளபளக்கும் கரு நீலப் புடவை ஒன்று இருந்தது.

''இவ்வளவு காலம் பழகினதுக்கு இதாவது நான் வாங்கிக் குடுக்க வேண்டாமா? வச்சிக்கோ, இனிமேல் என்னை மறந்துரு. புருசனோட சந்தோஷமாக் குடும்பம் நடத்து. அது தான் முறை'' என்று சொல்லிவிட்டு அந்த இடத்தை விட்டுப் புறப்படலானான் சிவலிங்கம்.

நிர்மலா அவனைத் தாபத்தோடு விழித்துப் பார்த்தாள்.

''ஐயா, கொஞ்சம் உட்காருங்களேன்'' என்றாள் பொன்னம்மாள்.

''இல்லே. நானும் போகணும். யாரும் பார்த்தால் நல்லா இருக்காது. பழசை மறந்துட வேண்டியதுதான்'' என்று சிவலிங்கம் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, நிர்மலா கண்ணீர்

அடேயப்பா, வளர்ச்சியின் உச்சநிலை!
இப்படியொரு மகத்தான மாறுதலை
விளைவிக்கமுடியுமா ஒரு டானிக்?



## ஆம், வளர்ச்சிக்கான பசியை உங்கள் குழந்தைக்கு வளமுடன் வழங்குவது இன்க்ரிமின்*

இன்க்ரிமின் டானிக் பிரத்தியேகமாகப் பசியைத் தூண்டி, வயிறார உண்ணும் மிகுதியான உணவை ஓங்கிய வளர்ச்சியாக மாற்றி, வாட்டசாட்டமாக வலுவோங்கச் செய்கிறது. சாப்பிடும் புரத சத்து அனைத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள உதவுகிறது இன்க்ரிமின். நம் உணவில் இல்லாத ஒரு முக்கிய அமினோ அமிலம் செறிந்துள்ள டானிக். வளரும் வயதினிலே (4 வாரம் முதல் 14 வயது வரை) அன்றாடம் கொடுங்கள் : செர்ரிப் பழச் சுவை ததும்பும் இன்க்ரிமின். மறவாதீர்கள் :

**இதுவே கண்கண்ட வளர்ச்சிப் பருவம், இன்க்ரிமின்* பருவம்**

◀ பெரிய குழந்தைகளுக்கு (இரும்புச் சத்து அடங்கிய) இன்க்ரிமின் ஸிரப்

இளங் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் டிராப்ஸ். ▼









Lederle

எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கின்றன. உலகெங்கும் நம்பிக்கைக்குப் பாத்திரமான ஒரு பெயராகிய லெடர்லீ தயாரிப்பது இன்க்ரிமின். லெடர்லீ டிவிஷன், சையனமிட் இந்தியா லிமிடெட், பி.ஓ. பாக்ஸ் 6577, பம்பாய்-18.

*அமெரிக்கன் சையனமிட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்.

லின்டாஸ்-INC-3-140TH

# இதோ ஆல்விமில்க்

## வைட்டமின்கள் நிறைந்த உணவு பானம்

ஆரோக்கியம் அதிகரிக்கச் செய்யும் வைட்டமின்கள், ஆடைச்சத்து நிறைந்த பால், பார்லிமால்ட், கோதுமை மாவு மற்றும் மால்ட்கள் செறிந்த உணவு பானம் இது. ருசி மிகுந்தது. எளிதில் ஜீரணமாவது. எல்லா வயதினருக்கும் டாக்டர்கள் ஆல்விமில்க்கை சிபாரிசு செய்கின்றனர்.

நோயுற்றிருக்கும் பொழுதும், நோய் குணமாகி உடல் தேறுவதற்கும் சிறந்த முறையில் உதவுவது. கர்ப்ப ஸ்திரீகளுக்கும், குழந்தைகளுக்குப் பாலூட்டும் தாய்மார்களுக்கும் ஏற்ற பானம். இன்றே ஆல்விமில்க் கேட்டு வாங்குங்கள், வேறு எந்த உணவு பானத்தையும் விட இதை மிகவும் விரும்புவீர்கள்.



*தயாரிப்பவர்கள்:*

**ஆல்விடோன் லாபாரடரீஸ்**

மதராஸ்-43.



வாங்கும் ஒவ்வொரு ஆல்வி மில்க், ஆல்விடோனுடனும், அழகிய பிளாஸ்டிக் கூடை ஒன்று இனமாக வழங்கப்படும்

வடித்தான். அதைப் பார்த்து விட்டு அவன் எதிரே உட்கார்ந்தான்.

''ஐயா, ஊருக்கு எப்போ?''

''இப்போ போக வேண்டியது தான். பஸ்ஸுக்குத்தான் புறப்பட்டுக் கிட்டிருக்கிறேன்!''

''எங்க வீட்டுக்கு வரக் கூடாதா?'' என்று கேட்டாள் நிர்மலா.''

''வந்தேனே! அம்மா கூட வரல் லேயா?'' என்று சொல்லிவிட்டுச் சிவ லிங்கம் சிரித்தான்.

''எங்க வீட்டிலே ஒரு நாளைக்கு நீங்க சாப்பிடணும். என் கையாலே உங்களுக்கு ஒரு வேளைச் சாப்பாடா வது பொங்கிப் போடணும்.''

''அதுக்கென்ன? சாப்பிட் டாப் போச்சு. ஒரு நாளைக்கு வர்றேன்''

''எப்போ?''

''அதுதான் அடிக்கடி மதுரைக்கு வந்துக்கிட்டிருக்கிறேனே! இன்னொரு தடவை வர்றப்போ வர்றேன். ஆனால் எதுக்கு இதெல்லாம்?''

நிர்மலா இரும்பவும் கண்ணீர் வடித்தாள்.

''இந்தா பாரு, அழாதே. உனக்கு எதுக்கு மனக் குறை? ஒரு நாளைக்கு உன் வீட்டுக்குக் கட்டாயம் வர்றேன்'' என்று அவன் உறுதி கூறினான்.

அப்போது நிர்மலா, ''இன்னும் பத்துப் பதினைஞ்சு நாள் கழிச்சு மது ரைக்கு வருவீங்களா? வரவேண்டிய வேலை இருக்கா?'' என்று திட்டவட்ட மான முடிவுடன் கேட்டாள்.

''வர்றேன். வேலை எப்பவும்தான் இருக்கும்.''

''வாங்க. பதினைஞ்சு நாள் கழிச்சுக் கட்டாயம் வாங்க!''

''சரி'' என்று சொல்லிவிட்டு அவன் எழுந்து விட்டான். அவன் போனபிறகு அந்த அல்வாவையும் காராசேவையும் தாயும் மகளும் தின்று முடித்து, கைகளைக் கல்லிலே தடவிச் சுத்தப்படுத் திக்கொண்டு, புதுப் புடவைப் பையுடன் எழுந்து வீடு திரும்பினார்கள்.

அவர்கள் திரும்பி வரும்போது ரங்க ராஜன் வீட்டில் இருந்தான். 'எங்கே போனீர்கள்? உன் அம்மா எப்பொழுது வந்தாள்?' என்று அவன் கேட்பான் என்று நிர்மலா எதிர்பார்த்தாள். அவனோ ஒன்றும் பேசவில்லை. கோபித் துக் கொண்டிருக்கிறானோ என்று நினைத்து, ''ஏன் இப்படி இருக்கி றீங்க? உங்க கிட்டச் சொல்லாமல் நான் எங்க அம்மாகூட வெளியிலே போயிட் டதுக்காகக் கோபமா?'' என்று அவள் கேட்டாள்.

அவனுக்கு அப்போதைய மன நிலையிலும் கூட இலேசாகச் சிரிப்பு வந்தது. ''நிர்மலா, எனக்கு ஒரு கோபமும் இல்லே. கோபம் எதுக்கு?'' என்று சொன்னான் ரங்கராஜன்.

அவன் ஏதோ யோசனையில் மூழ்கி யிருக்கிறானே ஒழிய, தன்னைக் கோபித் துக்கொள்ளவில்லை என்பதை நிர்மலா வும் புரிந்து கொண்டாள். எனவே நிம்மதியோடு திரும்பிச் சென்றாள்.

அன்றிரவு அவளுக்கு வழக்கம்போல் தலைவலி வந்து விட்டது. குப்புறப் படுத்துக் கொண்டு அழுது துடித்தாள். பொன்னம்மாள் தைலம் தடவிக் கொண்டிருந்தாள்.

'அவளுக்குத் தலை வலிக்கிறது; எனக் குத் தலை வெடிக்கிறது' என்று சொல் லிக்கொண்டே ரங்கராஜன் வெளியே போய் டாக்டரை அழைத்துக்கொண்டு வந்தான். அவர் முறைப்படி சோதனை களைச் செய்து பார்த்துவிட்டு, சில மருந் துகளை எழுதிக் கொடுத்து விட்டுப் போனார். அவற்றை வாங்கிக்கொண்டு வந்து கொடுத்து விட்டு, ரங்கராஜன் தனியே போய் இருந்து கொண்டு தன் தலை இரண்டாக வெடித்து விடாத வாறு அமுக்கிப் பிடித்துக் கொள்ப வனைப் போல் கைகளால் பிடித்துக் கொண்டு குனிந்த வண்ணம் உட் கார்ந்திருந்தான்.

அன்றிரவு அவன் சரியாகச் சாப்பிட வும் இல்லை.

நள்ளிரவாகியும் தூக்கம் வராமல் புரண்டு படுத்துக் கொண்டிருந்தான்.

அன்று மாலையில்தான் அவன் ராம லிங்கம் பிள்ளையை அவருடைய ஆபீசில் போய்ப் பார்த்து விட்டு வந்திருந்தான்.

அடுத்த மாதம் — இன்னும் மூன்று வாரங்களில் — விஜயாவுக்குக் கல்யா ணம் என்ற செய்தியை அவர் சொல்லக் கேட்டு அந்தச் செய்தியோடு வீடு திரும்பியிருந்தான் ரங்கராஜன்.

## அத்தியாயம் 9

விஜயாவின் கல்யாணத்துக்குச் சரி யாக ஒரு வாரத்துக்கு முன், சாத்தூரில் தங்கத்துக்குக் கல்யாணம். அருணாசல முதலியார் நேரிலேயே வந்து தமைய னையும் அண்ணியையும் அழைத்தார். ரங்கராஜனை அவர் திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. நிர்மலாவையோ அவர் கணக்கிலேயே சேர்க்கவில்லை. 'எவளோ ஒருத்தி நடமாடிக் கொண்டிருக்கிறாள், நமக்கென்ன?' என்பது போல அவர்

லட்சியம் பண்ணுமல் இருந்தார். அவர் வீட்டில் நுழைந்ததுமே ரங்கராஜன் வெளியே போய்விட்டான். அவர் எதற்காக வந்திருக்கிறார் என்று அவனுக்குத் தெரியும்.

''அண்ணி, என் கடமை. அதுக்காக வந்தேன். எனக்கு இருப்பது ஒரு அண்ணன்; ஒரு அண்ணி. நான் நடத்தப் போற கல்யாணமும் இது ஒண்ணுதான். நீங்க கட்டாயம் வரணும். எது எது எப்படி எப்படி ஆயிட்ட போதிலும் இந்த ஒரு காரியத்திலேயாவது நீங்க வந்து கூட இருந்து எல்லாத்தையும் நடத்தணும். அப்புறம் எது எப்படி ஆயிட்டாலும் சரி. கடுதாசி போட்ட தோடு நின்னுக்கிட என் மனசு கேட்கல்லே. நேரிலே வந்துட்டேன். என்ன சொல்றீங்க?'' என்று கேட்டார்.

என்ன சொல்வார்கள்?

அருணுசல முதலியாரின் அழைப்பை ஏற்றுக் கொண்டார்கள்.

நிர்மலா எதிர்பார்த்தபடியே அவ்விருவரும் சாத்தூருக்குப் புறப்பட்டுச் சென்ருர்கள். ரங்கராஜன் அவர்களோடு போக மறுத்து விட்டான்.

''சித்தப்பா என்னைக் கூப்பிடவுமில்லே; கூப்பிட்டாலும் நான் வரப் போறதில்லே. நான் வர்றதனுலே அவருடைய அந்தஸ்தும் கௌரவமும் பாழாவானேன்? வேண்டாம்'' என்று சொல்லிவிட்டான் ரங்கராஜன். ஆனல் பல வருஷங்களாக உடன் பிறப்பை விட நெருக்கமாகப் பழகிய தங்கத்தின் கல்யாணத்துக்குத் தன்னுல் போக முடியாமல் போனது பற்றி அவனுக்கு உள்ளூரத் துயரம் இருக்கத்தான் இருந்தது. எனினும் விஜயாவின் கல்யாணத்தையே பார்க்க முடியாது என்கிற போது இது அவ்வளவு பெரிய துயரமல்ல என்று அப்புறம் மனத்தைச் சமாதானப்படுத்திக் கொண்டான்.

தங்கத்தின் மாப்பிள்ளை எப்படிப் பட்டவன் என்று அவனுக்குத் தெரியாது. அதை அவன் அம்மாளிடத்திலும் விசாரிக்கவில்லை. ஆனல் விஜயாவின் கணவனுக வரப் போகிறவனைப் பற்றி அவன் நன்கு விசாரித்துத் தெரிந்து கொண்டிருந்தான். ராமலிங்கம் பிள்ளையின் பால்ய சிநேகிதரான ஒரு பெரும் பணக்காரரின் மகன். உயர்ந்த படிப்புப் படித்தவன். குணத்திலும் உத்தமன் என்று கேள்விப்பட்டான். அந்தமட்டில் அவள் பாக்கியசாலி ஆகிவிட்டாள் என்றும், எதிர்காலத்தில் அவளுடைய கணவனுடன் சிநேகம் கொள்ளவும், இரு குடும்பங்களும் உறவு கொள்ளவும் வாய்ப்பு உண்டாகாமல் போகாது என்றும் எண்ணி அவன் சந்தோஷப்பட்டான். இந்தக் கல்யாணத்துக்கு அவள் எப்படிச் சம்மதித்தாளோ, சம்மதிக்கு முன் அவள் எப்படியெல்லாம் கஷ்டப்பட்டாளோ என்று அவன் பல முறை கற்பனை செய்து பார்த்தான். 'எப்படி இருந்தபோதிலும் என் கல்யாணத்தை சகித்துக் கொண்டவளுக்கு வேறு எந்தத் துயரத்தையும் தாங்கிக் கொள்ள முடியும் என்றே நினைக்கிறேன். அவள் மனோ திடம் கொண்டவள். மகாராணி போன்ற கம்பீரமும் பேராற்றலும் படைத்தவள்..... அத்துடன் உத்தமமான ஒருவனே கணவனுக வாய்க்கப் போகிறுன். வெகு சீக்கிரத்தில் அவள் துயரங்களை மறந்து கணவனேடு கைகோத்துக் குடும்பம் நடத்துவாள்.'

விஜயாவைப் பற்றி இவ்விதமாகப் பின்னணியில் சிந்தனைகள் ஓடிக் கொண்டிருந்தபோதிலும் நிர்மலாவை மணந்து கொண்டதற்காக அவன் வருந்தவே இல்லை. அவளுடைய அற்ப சுபாவங்களை வெளித் தோற்றத்தில் அவன் கடிந்து கொண்டானே ஒழிய, அந்தரங்கத்தில் அவளிடத்தில் அனுதாபமே இருந்தது. 'எப்படி எப்படியோ கஷ்டப் பட்டவள்! சிறு சிறு ஆசைகளைக் கூட நிறைவேற்றிக் கொள்ள முடியாமல் வறுமையில் வாடி உழன்றவள். இவளுக்குப் பெரிய குடும்பங்கள், பெரிய குடும்பத்து வாழ்க்கை முறைகள் பெரிய சிந்தனைகள் — இவை பற்றியெல்லாம் எதுவுமே தெரிந்திருக்க முடியாது. அவளை எந்தக் காரணத்தை முன்னிட்டும் கோபிப்பதில் அர்த்தமில்லை. இருந்தத்தான் வேண்டும்.' என்று நாளுக்கு நாள் அவள் மீது அநுதாபத்தை அதிகமாகச் சொரிந்து வந்தான். அவளுடைய நிரந்தரத் தலைவலி அவனுடைய அநுதாபத்தை இன்னும் அதிகமாகத் தூண்டி விட்டது. எந்த வைத்திய சிகிச்சையிலும் குணமாகாமல் நீடித்து வரும் அவளுடைய தலைவலியை எவ்வளவு பணம் செலவழித்தாவது சென்னை நகரில் பெரிய ஆஸ்பத்திரிகளுக்குக் கொண்டு போயாவது—விரைவில் தீர்த்து விட வேண்டும் என்று அவன் தீர்மானித்தான்.

விஜயா திருமணமாகி, ஒரு குழந்தையையும் பெற்ற பின் அவள் குடும்பத்தோடு தாராளமாகப் பழகும் சந்தர்ப்பம் வரும். அப்போது அவள் தன் மனைவியையும் பார்ப்பாள், பார்த்துவிட்டுத் தன்னுடைய செயலுக்காகத் தன்னை விண்ணளாவத் தூக்கி வைத்துப் பாராட்டுவாள் என்றெல்லாம் அவன் ஆசைக் கனவுகள் விரிந்து கொண்டிருந்தன. **(தொடரும்)**

சென்னை
சாந்தி • கிரௌன் • புவனேசுவரி
(டீலக்ஸ் ஏர்கண்டிஷண்)
மற்றும் தென்னாடெங்கும்

நடிகர் திலகம் சிவாஜி கணேசன் அளிக்கும்
சாந்தி பிலிம்ஸ்

# தெய்வ மகன்






தயவுசெய்து என்னைத் தொந்தரவு செய்யாமல் இருக்கிறீர்களா ?

நான் கனவில் இருக்கிறேன். 'இருக்கிறேன்' என்று சொன்னேன் ? இல்லை யில்லை. பறக்கிறேன். மிதக்கிறேன். தரையில்தான் நிற்கிறேன் என்றாலும் கால்கள் தரையிலே பாவவில்லை. கண் விழித்துக் கொண்டுதான் இருக்கிறேன் என்றாலும் பார்க்கவோ ரஸிக்கவோ இல்லை. உள்ளம் குதிக்க, கையும் காலும் தாளம் போடுகின்றன என்றாலும் அதற்குக் காரணம், ரேடியோவிலிருந்து வரும் 'பாப்' சங்கீதம் மட்டுமல்ல. வேறு ஒரு காரணமுமிருக்கிறது.

எனது ஒரு வார கால பிரம்மச்சரியத்துக்கு முற்றுப்புள்ளி வருகிறது. என்னுடைய 'இவள்' இந்நேரம் ஜோலார்ப்பேட்டை ஜங்ஷனில் தூங்கி வழிந்து, கொட்டாவி விட்டவாறு ரயிலுக்காகக் காத்திருப்பாள்.

மேஜையின் மீதிருந்த கடிதத்தை மீண்டும் ஒரு முறை எடுத்துப் படித்தேன். "அப்பாவின் கண்டு விரல் சுளுக்கு சரியாகி விட்டது.... நாளை புறப்படு என்றார். நாளை இரவு நீலகிரியோ, மங்களூரோ பிடித்துக் கொண்டு வருகிறேன். அவசியம் ஸ்டேஷனுக்கு வரவும்:" — போன்ற வரிகளில் என் கண்கள் நீந்தின. குஷியுடன் கடிதத்தைத் தூக்கிப் போட்டவன் தூங்கி விட்டேன்.

"ஏண்டா ! தூங்கிட்டியா ?" என்ற என் அம்மாவின் குரல் எங்கோ தொலைவில் கேட்பது போலிருந்தது. எழுந்து வந்து அம்மா ரேடியோவை நிறுத்தி, விளக்கையும் அமர்த்திவிட்டுப் போவதுகூட ஏதோ கனவில் நடப்பது போலவே யிருந்தது.

"கெட் அவுட் ப்ளீஸ்" என்று செல்லம் கொஞ்சும் என்னவளின் ஜடையைச் சட்டென்று பாய்ந்து பிடித்துக் கொள்ளுகிறேன். அவள் திமிறுகிறாள். "ஜடையை மட்டும் பிடிக்காதீங்க" என்று அவள் கெஞ்ச, "ஏன் சவுரி கழன்று விடுமா ?" என்று நான் கேலியாகக் கேட்டேன்.

''டேய் !''

'ஐயோ! அம்மாவின் குரல் கேட்கிறதே!' கூடவே முதுகிலும் 'பொத்'தென்று ஓர் அடியும் விழுந்தது. கண் விழித்த வேகத்தோடு பாம்பு மாதிரி தலையைத் தூக்கிப் பார்த்தேன்.

இடுப்பில் கை வைத்தவாறு முறைத்துக் கொண்டிருந்தார் அம்மா. ''ஆமாம் ! தூக்கத்தில் குறட்டைதான் விடறேன்னு பார்த்தேன். இப்ப உளறவும் ஆரம்பிச்சுட்டியா ?''

''குறட்டையா ? உளறலா? இதென்ன அக்கிரமப் பேச்சு ?'' என்றவள், எழுந்து கண்ட கனவின் இனிமையை நெஞ்சில் சுவைத்தவாறு அவசரம் அவசரமாகக் குளியலறையில் நுழைந்தேன்.

'டிரிம்'மாக உடுத்துக் கொண்டு நான் தயாரான போது, காப்பியைக் கலந்து கொண்டு வந்து வைத்த அம்மா சொன்னார்: ''கவலைப்படாதே ! உங்க இரண்டு பேருக்கும் டிபன் தயார் பண்ணி வைத்து விட்டே போறேன்.''

தங்கை வாய் பொத்திச் சிரித்துக் கொண்டிருந்தாள்.

'' எங்கே ?''

'' எங்கேயோ ?'' தங்கை வால் சிரித்தது. ''நாங்கள் எதற்கு? அப்புறம் தூரத்த வழி பார்ப்பாய் ! அதற்குமுன் நாங்களே புறப்பட்டுப் பெரம்பூருக்குப் போகிறோம், பெரியண்ணா வீட்டுக்கு !''

அவள் தலையில் செல்லமாகக் குட்டு வைத்துவிட்டு வெளியே வந்தேன்.

பெங்களூர் வந்தது. நீலகிரியும் வந்தது. இரண்டையும் சல்லடை போட்டு அரித்தேன். ஊஹூம் ! ஏமாற்றம் ! 'வருவான். மங்களூர் மெயிலில் வருவான்' என்று என்னை நானே தேற்றிக் கொண்டு நடந்தேன். கூடத் துணைக்கு யாராவது வருவார்களோ ? யார் இருக்கிறார்கள் வர ? மாமனார் உடம்பு சரியில்லை. மாமியார் ? மூச் ! ராமன் இருக்கும் இடம்தான் அந்தச் சீதைக்கும் அயோத்தி. எதிர்பார்ப்பதற்கில்லை. தனியாகத்தான் ரயிலேற்றி விட்டிருப்பார்கள்.

'சே! என் தவிப்பு தெரியாத மங்களூர் மெயில்' என்று நான் அலுத்துக் கொள்ளும் போதே, ஒலிபெருக்கி நான்கு மொழிகளில் 'இன்னும் சில நிமிஷங்களில் வந்து சேரும்' என்று பறைசாற்றியது. பரபரப்புடன் பிளாட்பாரத்தின் அந்தண்டைக் கோடிக்கு ஓடிப் போய் நின்றேன்.

வந்து வந்து போகும் ஜன்னல்களைப் பார்த்துக் கொண்டிருந்த என் கண்களில் பெண்கள் பெட்டியிலிருந்து எக்கிய என் 'அவளின்' தலை தெரிந்து என்னைப் பூரிக்க வைத்தது. ஜன்னல் நெருங்கியதும் என் கண்கள் அச்சத்தால் விரிந்தன. என் தலையில் இடி இறங்கிக் கொண்டிருந்தது.

என்னவளுக்கு மேலே, பக்கங்களிலிருந்து ஏகப்பட்ட வால்கள் தலையை நீட்டி, 'மாமா... அதோ மாமா....'' என்று கையாட்டின, கத்தின, கும்மாளமிட்டன.

'லே' என்று விழித்தவாறு நின்றேன்: நின்று கொண்டே யிருந்தேன்.

பூந்தமல்லி நெடுஞ்சாலையில் டாக்ஸி வழுக்கி ஓடிக் கொண்டிருந்தது.

''கல்கத்தாவிலிருந்து அண்ணாவும், விஜயவாடாவிலிருந்து அக்காவும் வந்திருந்தாங்க. அப்பாவைப் பார்க்க.'' பின் ஸீட்டில் குழந்தைகளின் அடைசலுக்கு நடுவில் உட்கார்ந்திருந்த அவள் சொன்னாள். ''இன்னும் ரெண்டு நாளில் மெட்ராஸுக்கு வந்து ஊருக்குத் திரும்பப் போகிறாங்களாம். 'குழந்தைங்க ரெண்டு நாள் என்கூடத் தங்கட்டும். போகும் போது 'பிக்கப்' பண்ணிக்கலாம். என்றேன். அவங்களும் சரின்னு அனுப்பி வைத்தாங்க.''

''ரொம்ப சரி'' என்ற என் ஆமோதிப்பு மிகவும் காரமாயிருந்திருக்க வேண்டும்.

'' ஏங்க ? ஏன் ?'' என்று பதறி விட்டாள் அவள். ''இரண்டு நாள்தானே ? அட்ஜஸ்ட் பண்ண முடியாதா ?''

''ஆஹா ! தாராளமாய்'' என்ற என் பதில் ரொம்பவும் கோபமா யிருந்திருக்க வேண்டும்.

அவள் பேசவேயில்லை.

''வாடி, கொழுந்தே!'' பக்கத்து வீட்டுப் பாட்டி பொக்கை வாய் திறந்து சிரித்தார்.

''ஏன்டி, போறச்சே தனியாத்தானே போனே? நாலு நாட்கள் கழிச்சுத் திரும்பறதுக்குள்ளே இத்தனை குட்டிகளைப் பெத்துக் கொண்டு வந்துட்டியே ! பெரிய ஆளுடி நீ!'' என்று தமாஷ் பண்ணினாள். என் வீட்டுக் காரியும் பிரமாதமாய் ரசித்துச் சிரித்தாள். ''என்ன சிரிப்பு வேண்டிக் கிடக்கு!'' என்று சிடுசிடுப்புடன் பாட்டியிடமிருந்து சாவியைப் பெற்றுக் கொண்டு போய்ப் பூட்டைத் திறந்து உள்ளே போனேன்.

''என்னங்க !'' பட்டாளம் புடைசூழப் பின்தொடர்ந்தாள் அவள். ''அத்தை வந்திருந்தாங்களாமே ? ஏன் போயிட்டாங்க ? என் மேலே ஏதாவது கோபமா ?''

''பெரம்பூருக்குப் போய்க் கேளு'' என்று சொன்னவாறு ஆபீஸுக்குப் புறப்பட்டேன்.

அதற்குள் சமையலறையில் ஓர் ஊர்வலம் நடத்திவிட்டுத் திரும்பி வந்தாள் அவள் ''அத்தை மணக்க மணக்கப் பூரியும் மசாலாவும் செய்து வைத்திருக்காங்க; ரெண்டு சாப்பிடுங்களேன்.''

''பூரியும் வேணும். மஸாலாவும் வேணும்'' என்று எரிச்சலுடன் கூறிவிட்டு ஆபீஸுக்குப் போய் விட்டேன்.

ஆபீஸில் எனது வாடிய முகத்தைப் பார்த்த கோமகவரனுக்குச் சந்தேகம் வந்துவிட்டது: ''ஏனப்பா! இன்னும் வீட்டிலே வரல்லே ?'' என்றான்.

''வந்தாச்சு ஒரு பட்டாளத்தோட. எல்லாம் இத்துனூண்டு, இத்துனூண்டு வால்கள்'' என்று நான் வயிறெரிந்து கூறியபோது பின்னால் பழனி நிற்பதைக் கவனிக்கவில்லை.

பழனிக்குத் தெரிந்தால் போதும் ஆபீஸ் முழுதும் 'ஸர்குலர்' அனுப்பியது மாதிரி.

''சாயங்காலம் நிறைய வேலை தரவா ? ஓவர்டைமில் பிடித்துப் போடவா?'' என்று

# தாங்க முடியாத நோவா?



ஸால்ஜான் தலைநோவின் தாக்குதலைத் தடுக்கிறது.
பல்வலி, உடல்நோவு, ஃப்ளூ, தசைவலி
ஆகியவற்றிலிருந்து நிவாரணமளிக்கிறது.

CP-SS-17

பலநிறங்கொண்ட

SS

# ஸால்ஜான்

நோவுகளிலிருந்து துரிதமான
நிச்சயமான, அபாயமில்லாத
நிவாரணம் அளிக்கிறது.




ஒரு ஸ்மித்,
ஸ்டானிஸ்ட்ரீட் தயாரிப்பு

ராமன் கேலி செய்த போதும் சரி... '-பூ வாங்கிப் போகக் காசிருக்கா இல்லையா?.... இல்லையானும் என்னைக் கேளு. எதற்கும் இதை வைச்சுக்கோ'' என்று பழனி பதினைந்து காசை என் கையில் வைத்து அழுத்திய போதும் சரி..... ''அமிஞ்சிக்கரையில் நைட் ஷோ பார்த்து விட்டுப் பன்னிரண்டு மணிக்கு உன் வீட்டில் வந்து கதவைத் தட்டப் போறேன். தொந்தரவாயிருக்காதே....!'' என்று மகாலிங்கம் கேலி செய்த போதும் சரி...'உம்'மென்று தானிருந்தேன் நான்.




''என்னப்பா இது, ரயிலில் கழுத்திலே 'L' போர்டை மாட்டிண்டு உட்கார்ந்திருக்கியே!''

''இதுதானுங்க முதல் தடவையாக ரயிலிலே பயணம் செய்வது - டிக்கட்டு இல்லாமல்....''

ஆபீஸ் முடிந்ததும், எட்டு மணி வரையில் காரம் போர்டு விளையாடி விட்டு, வீட்டுக்கு வந்தேன். வீட்டை நெருங்கும் போதே, 'ஓ' என்ற இரைச்சல் கேட்டது. சின்னக் குழந்தைகளோடு சேர்ந்து இந்தப் 'பெரிய' குழந்தையும் சிரித்துக் கொண்டிருந்தது.

நான் நுழைந்ததும் சட்டென்று அமைதியாயிற்று. எல்லா வால்களும் என் முகத்தை உற்றுப் பார்த்து விட்டு, 'கொல்'லென்று சிரிக்க ஆரம்பித்து விட்டன. என்னுடைய வீட்டுக்காரியும் வாயைப் பொத்திக் கொண்டு சிரிப்பதைக் கண்டதும் எனக்கே என் மீது சந்தேகம் வந்துவிட்டது. பீரோ கண்ணாடியைப் பார்த்தவன் திடுக்கிட்டு விட்டேன்.

காரம் போர்டு ஆடும் போது, பவுடர் அப்பிய விரல்களால் மூக்கைச் சொறிந்து கொண்டிருக்கிறேன் போலிருக்கிறது. மூக்கில் மட்டும் திட்டுத் திட்டாகப் பவுடர்! 'அட கண்றாவியே! இந்தக் கோரத்துடனேயா பஸ்ஸில் வந்தேன்?'

சாப்பாடு முடிந்து தூங்கும் நேரம் வந்தது.

தரையில் விரித்த அந்தப் பெரிய ஜமுக்காளத்தின் அந்தக் கோடியில் அவள். இந்தக் கோடியில் நான். நடுவில் ஆறு குழந்தைகள் படுத்துக் கொண்டிருந்தன.

மெல்லத் தலையைத் தூக்கிப் பார்த்தேன். அவளும் நிமிர்ந்து பார்த்து உதட்டைக் கடித்துச் சிரித்தாள். எனக்கு ஆகாயத்தில் மிதப்பது போன்றதோர் உணர்ச்சி. மணமான புதிதில் என் 'அவள்' மலர்ப் பூங்காவில் மல்லாந்து படுத்திருக்க நான் ஆர்வத்தோடு அவள் முகமலரை நெருங்கியபோது அப்பப்பா, அவள் பட்ட கூச்சம்! இதையெல்லாம் நினைத்துக்கொண்டு எத்தனை நேரம்தான் எட்டப் படுத்திருப்பது? மறுபடி மெல்லத் தலையைத் தூக்கி எட்டிப் பார்த்தேன். அவள் தூங்கி விட்டிருப்பது இலேசான விடிவிளக்கு ஒளியில் தெரிந்தது. கறுப்பானாலும் அவளது கதுப்புக் கன்னங்கள் பளிச்சென்று தெரிந்தன. கிள்ள வேண்டும் போல் கை குறுகுறுக்கவே மெல்ல எழுந்தேன்.

''மாமா'' என்ற குரல் கேட்டதும், விலுக்கென்று மீண்டும் படுத்துக் கொண்டேன். பக்கத்திலிருந்த பொடியன் எழுந்து, என் வயிற்றின் மேல் உட்கார்ந்து கொண்டான். ''என் பூட்ஸுக்கு லேஸ் அறுந்து போச்சு. புதுசு வாங்கித் தர்றியா?''

''ஆகட்டும். இப்ப படு பேசாமல்'' என்று நான் சொல்ல, ''நல்ல மாமா'' என்று என் கழுத்தைக் கட்டிக் கொண்டு விட்டது அந்தக் குட்டிப் பிசாசு. பிறகு விடியும்வரையில் அது என்னை விடவேயில்லை.

மறு நாள் காலை, 'ஷேவிங்' பண்ணிக் கொள்ளுவதற்காக வெந்நீரும் கையுமாகக் குளியலறையில் நுழைந்தவன், ''டேய்... டேய்...'' என்று பதறிப் பாய்ந்தேன். அதற்குள் காரியம் மிஞ்சிவிட்டது. 'பென்சில் சீவறேன் மாமா' என்ற அந்த பயலை ஓங்கி அறைய வேண்டும் போல் இருந்தது.

''அறைஞ்சேன்னா பாரு. ஓடு ராஸ்கல்'' என்று அவனை விரட்டியடித்தேன்.

குளிக்கும் போது, ஒரு பக்கெட் தண்ணீரில் இரண்டு சொட்டு ஓடிகொலோன் வாசனை மருந்தைப் போட்டுக் குளித்தால்தான் எனக்குக் குளித்தாற் போல் இருக்கும். இன்றும் அப்படியே விடும் போது கவனித்தேன். குளியல் சோப்பு சாக்கடையில் கரைந்து சிறுத்துக் கிடந்தது. எந்தச் சனியனின் வேலையோ?

புட்டியைக் கீழே வைத்து விட்டுப் புது சோப் எடுக்க வெளியே வந்தவனுக்கு ஆத்திரம் வந்தது. பிறந்த மேனிக்கு நின்றிருந்தது ஒன்று. ''அடச் சீ! வயசு நாலாச்சு. இன்னும்கூட வெட்கம் வரல்லையா? ஓடு. போய் ஜட்டி போட்டுக்கோ போ'' என்று விரட்டியடித்தேன்.

''ஆயி போயித்தேன் மாமா'' என்ற அதன் மழலை மொழி புரியக் கொஞ்சம் நேரமாயிற்று எனக்கு. உள்ளே போய், 'அவளை' அனுப்பிவிட்டுச் சோப்பைத் தேடிக் கொண்டு வந்தேன். குளியல் அறையில் புகுந்து விளையாடிக் கொண்டிருந்த அந்த நிர்வாணச் சாமியாரை விரட்டி விட்டுக் குளித்தேன்.

வழக்கத்துக்கு விரோதமாக இன்று ஓடிகொலோன் வாசனை 'கும்'மென்று வீசிற்று. கடைசிச் செம்பு தண்ணீரை அள்ளும்போது தான் காரணம் புரிந்தது. ஓடிகொலோன் புட்டி செம்பில் அமுங்கி வெளிவந்தது.

முணுமுணுப்புடன் ஹாலுக்கு வந்தவன் நின்றேன். பாய்ந்தேன், ''ஏய்...ய்...'' என்று. அதற்குள் காரியம் மிஞ்சி விட்டது. வண்ணானுக்குப் போடவென்று நான் எடுத்து வைத்திருந்த வெள்ளை பாண்ட்

மடியில் தூங்கி எழுந்திருந்தது. மடிப் புட்டியைக் கவிழ்த்துவிட்ட வால் ஒன்று இளித்தது. ''இங்கி கொட்டிப் போச்சி மாமா. சித்தி பார்த்தா திட்டுமேன்னு நானே துடைச்சித்தேன் !''

அவமானம் ! என்னிடமில்லாத பயம் 'அவனிட'மா ? ''அறைஞ்சேன்னு பாரு, குட்டிப் பிசாசு'' என்று நான் கையை ஓங்கவே, 'ஓ'வென்று அலறி விட்டது அந்தப் பிசாசு.

விடு விடென்று வந்த என்னவள், என்னை உறுத்துப் பார்த்தவாறு அந்தக் குட்டிப் பிசாசை இழுத்துக் கொண்டு போனாள்.

'சத் ! நரகம் என்கிறார்களே, அது இதை விடவா பயங்கரமானது?' சலிப்புடன் பான்ட் சட்டையை மாட்டிக்கொண்டு கிளம்பினேன். அவள் கேட்டாள், ''எங்கே கிளம்பியாகிறது ?''

''இதென்ன கேள்வி? ஆபீஸுக்குத்தான்.''

''இன்னைக்கு ஏது ஆபீஸ் ?'' என்று அவள் கேட்ட போதுதான் உறைத்தது. ஓ ! இன்று காந்தி ஜெயந்தியா ?

''தெரியும் ! ஆபீஸ் கிளப்பில் விளையாடப் போறேன்'' என்று நான் கூறவும், அவள் காப்பி கொண்டுவர உள்ளே போனாள்.

''மாமா !'' ஒரு வால் இளித்தது. ''என் பூட்ஸுக்கு லேஸ் வாங்கித் தர்றியா ?''

''பூட்ஸுமில்லே லேஸுமில்லே!'' என்று நான் விரட்ட, அது 'ஆவ்... லாவ்... லேஸ் வேணும் லாவ்....'' என்று மல்லாந்து விழுந்து கையும் காலும் உதறி அழவே, என் ஆத்திரம் அணை உடைந்தது. ''உதைப்பேன் ராஸ்கல். மூஞ்சியைப் பாரு. கோட்டான் மாதிரி. சனியன் எழுந்திருடா கழுதை'' என்று அவனை மிரட்டி எழுப்பி நிறுத்தினேன். மற்ற வால்களெல்லாம், ''ஐயோ, மாமா அடிக்க வர்றாரே ! அந்தோ சித்தி... மாமா அடிக்கறாரே... கொல்றாரே!'' என்று கோரஸில் அலறிக் கூச்சலிட்டனர்.

ஆவேசமாக வந்தாள் என் சம்சாரம், ''ஏன் இப்படிப் போட்டு வதைக்கிறீங்க? என்ன பாவம் பண்ணினாங்க அவங்க? ஆத்திரம்னு ஒண்ணு வந்தா... அவங்களைக் கூட்டிக்கிட்டு வந்த பாவத்துக்கு என்னை அடிங்க, கொல்லுங்க, அவங்களை மட்டும் தொடாதீங்க'' என்று வீரத்தோடு ஆரம்பித்தவள், ''கோட்டானும், சனியனும், கழுதையாம் அதெல்லாம் உங்களுக்குத்தான் வந்து பிறக்கப் போறது.... வரிசையாக'' என்று அழுகையில் முடித்தாள்.

''பேசாதே !'' என்று கத்திவிட்டுப் படிக்கட்டு இறங்கியவன், ஆத்திரம் பொறாமல் மீண்டும் திரும்பப் போய், ''நீ சொன்னபடியே எனக்கு வந்து பிறந்தாலும் பாதிக்கப்படறதும், அவதிப்படப் போறதும் நீதான்'' என்று ஞாபகமூட்டி, மேலும் அழ வைத்து விட்டு வெளியேறினேன்.

கொஞ்ச நேரம் டேபிள் டென்னிஸ், கொஞ்ச நேரம் காரம் போர்டு, சீட்டு என்று பொழுதைக் கழித்து விட்டுச் சாப்பாட்டு நேரத்தில் ஹோட்டலுக்குக் கிளம்பியபோது, பரணி, கோடீசுவரனோடு, ''நானும் வருகிறேன்'' என்று கிளம்ப எதிர்ப்புக் கிளம்பியது. ''மனைவி வீட்டிலிருக்கிறபோது ஹோட்டலில் சாப்பிடுவதாவது?'' என்று துரத்தியவர்கள் என்னோடு பஸ்ஸில் ஏறி வீடு வரை வந்து விட்டுப் போனார்கள். எதையாவது நினைத்துக் கொண்டு (ஷெனாய்நகர் வரை டிக்கெட் வாங்கியிருக்க) பாதி வழியில் இறங்கி விடுவது என் வழக்கமாதலால் அவர்களுக்கு என் பேரில் நம்பிக்கையேயில்லை!

வீட்டினுள் நுழைந்த எனக்கு வியப்பு! பெரிய மைத்துனர் பெரிய மைத்துனி என்று ஒரே கும்பல்.

'' என்ன மாப்பிள்ளை ? லீவும் அதுவுமா எங்கே போய் வர்றீங்க ?'' என்றார் மைத்துனர்.

''ஆபீஸ் கிளப்பில் காரம்போர்டு ஆடி விட்டு வந்தேன்'' என்று நான் சொன்னது தான் தாமதம். உள்ளே சாப்பிட்டுக் கொண்டிருந்த வால்களெல்லாம் எச்சில் கையோடு ஓடி வந்து நின்றன. அவை ஆவலுடன் என் மூக்கையே பார்த்த விதத்தை நான் ரசிக்கவில்லை.

''போங்க! போய்ச் சாப்பிடுங்க'' என்று செல்லமாய் விரட்டியவாறு ஒரு சின்னப் பையனை எடுத்து முத்தம் கொடுத்து, குழந்தைகளிடம் எனக்குள்ள பாசத்தை (!) காட்டிக் கொண்டு நிமிர்ந்தேன்!

இப்போது பெரியவர்களெல்லாம் வியப்புடன் என் மூக்கைப் பார்த்துப் பின் 'கொல்' என்று சிரித்தார்கள். சமையலறையிலிருந்து வெளியே வந்த என் மனைவியும், தன் கோபத்தை மறந்து சிரிக்கவே, சந்தேகத்துடன் கண்ணாடி பீரோவைப் பார்த்தேன். நறநறவென்று பல்லைக் கடித்தேன்.

சோற்றுப் பருக்கையொன்று என் மூக்கின் மீது ஒட்டிக் கொண்டிருந்தது. பாழாய்ப் போன அந்த வால் சோற்றைத் தன் கன்னம் வரை பூசிக் கொண்டிருந்தது. முத்தம் கொடுக்கும்போதே எனக்குச் சந்தேகம்தான்.

எரிச்சலுடன் பருக்கையை எடுத்தெறிந்து விட்டு, மூக்கைத் துடைத்துக் கொண்டேன்.

**யோசனை......யோசனை......யோசனை......யோசனை......யோசனை...**



**யோசனை 1:** இப்போதெல்லாம் யாராரும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பிளேடுகளைத் துடைக்கக் கூடாது. ஏனெனில் அதில் ரசாயனக் கலவை பூசப் பட்டிருக்கிறது. ஆகவே காயவைக்க ஒரு யோசனை. ஒரு ஜெம் க்ளிப்பைப் பிரித்து நீட்டிப் பிறகு படத்தில் காண்பதுபோல் வளைத்துக் கொள்ளுங்கள். பிளேடைத் தண்ணீரில் அலம்பிவிட்டு, ஜன்னல் கம்பியில் தொங்க விடுங்கள். சூரிய ஒளியில் சில நிமிஷங்களில் அது காய்ந்துவிடும் ! ●

**யோசனை 2:** சீப்பிலுள்ள அழுக்கைச் சுலபமாக நீக்க வேண்டுமா ? தலைக்கு ஷாம்பு அல்லது சோப்பு போட்ட பிறகு தண்ணீர் விட்டுக் கொள்ளுமுன் சீப்பால் நாலு தடவை தலையை வாருங்கள். சீப்பு சுத்த மாகிப் பளபளக்கும். ●

**யோசனை... யோசனை...**



கேசத்தை நன்கு பராமரிப்பது நல்ல அழகுடன் விளங்க உதவுகிறது!

## பெங்கால் கெமிகல்ஸின்

# காந்தாரிடைன்

## ஹேர் ஆயில்

கேசத்தைப் பற்றி அக்கறையுள்ளோர் பெங்கால் கெமிகல்ஸ் காந்தாரிடைன் ஹேர் ஆயிலைத்தான் நினைக்கிறார்கள் பிசுக்கற்றது, கேசம் நன்கு பளபளப்பாகவும், நீண்டு அடர்த்தியாகவும் வளர்கிறது. கேசம் உதிர்வதைத் தடுக்கிறது. ஒவ்வொரு வீட்டிற்கும் மிகவும் இன்றியமையாதது.



**பெங்கால் கெமிகல்**

கல்கத்தா ○ பம்பாய்
கான்பூர் ○ டெல்லி

---



# பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு

பிரைவேட் லிமிடெட்

"பாலுஸேரி பில்டிங்ஸ்"

3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி
தபால் பெட்டி நெ. 414. மதராஸ்-5
தந்தி: 'EVERMANS' போன்: 85834

மதராஸ் சிட்பண்டு 1961 ஆக்ட்படி மேற்காணும் சீட்டுகள் நடத்தப்படுகின்றன
(மதராஸ் ஆக்ட் நெ. 24 of 1961)

25 மாதங்கள் — குறுகிய காலச் சீட்டுகள் — 25 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| A | ரூ. 200 | ரூ. 5000 | D | ரூ. 25 | ரூ. 625 |
| B | ரூ. 100 | ரூ. 2500 | E | ரூ. 20 | ரூ. 500 |
| C | ரூ. 50 | ரூ. 1250 | F | ரூ. 15 | ரூ. 375 |

40 மாதங்கள் — நீண்ட காலச் சீட்டுகள் — 40 அங்கத்தினர்கள்

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|
| LTA | ரூ. 500 | ரூ. 20000 |
| LTB | ரூ. 250 | ரூ. 10000 |
| LTC | ரூ. 125 | ரூ. 5000 |

சேரும் விருப்பை விவரித்து எங்கள் விதிகளுக்கு எழுதவும்

கிளைகள்: புது டில்லி — பம்பாய் — பெங்களூர் — கல்கத்தா

**எங்கள் சேவை உங்களுக்குத் தேவை**

VSK - BBC - 1000 TM - K

"நாளைக்கு வருவதாகத்தானே இவள் சொன்னாள்?" என்று பேச்சை மாற்றினேன்.

"இன்றைக்கே ரிசர்வேஷன் கிடைத்து விட்டது என்று டிரங்க்கால் வந்தது. உடனே அப்பாவின் காரில் புறப்பட்டு வந்துவிட்டோம்" என்று மைத்துனர் சொல்லச் சொல்ல ஆகாசத்தில் பறப்பது போல் இருந்தது எனக்கு. "அப்பாடா! தொல்லை விட்டது" என்று நினைத்துக் கொண்டவன் விழுந்து விழுந்து உபசாரம் செய்ய ஆரம்பித்து விட்டேன்.

ஒரு வழியாக எல்லாரையும் கொண்டு போய்க் கல்கத்தா மெயிலில் அடைத்தாயிற்று. முதல் வகுப்புப் பெட்டியினுள்ளே, அண்ணாவிடமும், அக்காவிடமும் அவள் அரட்டை அடித்துக் கொண்டிருக்க, பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்தேன் நான். வண்டி புறப்படப் போகும் நேரத்தை ஆவலுடன் கணக்குப் போட்டவாறு நின்றிருந்தேன்.

குழந்தைகளுக்கு என் மீது திடீர்ப் பாசம் பிறந்து விட்டது. "நல்ல மாமா", "மாமா எனக்குத்தான். உனக்கில்லே போடி" என்று என் மீது உரிமைப் பிரச்னை கிளப்பின.

நானும் பாசத்துடன் அவர்களை அணைத்துக் கொண்டேன்.

கலர்க்காரன் வந்தான். ஆளுக்கொரு புட்டி வாங்கித் தந்தேன். இது லஞ்சம்தான்! என்றாலும் குற்றமில்லை. நான் அடிக்க வந்ததையும், திட்டியதையும் பெற்றோரிடம் சொல்லாமல் இருக்குமில்லையா?

வண்டி நகர ஆரம்பித்ததும், "டாட்டா" என்று கோரஸ் கிளம்ப, நாங்களும் கையாட்டிவிட்டுத் திரும்பினோம் வீட்டுக்கு.

சமையலறையைக் கழுவித் தள்ளும் ஓசை கேட்டது.

ரேடியோவில் ஊருக்கு ஊர் தாவிக் கொண்டிருந்தேன். உள்ளத்தில் ஏதோ ஒரு கிளுகிளுப்பு.... இனமறியாத ஒரு தவிப்பு.

கார் வந்து வாசலில் நின்றதுகூடத் தெரியாத வகையில் அப்படி ஓர் உற்சாகம்.

கதவு தட்டப்பட்டதும்தான் சட்டென்று உணர்வு திரும்பியது. "யார் இந்த நேரத்தில்?" என்ற கேள்வியுடன் கதவைத் திறந்தால்....

நுங்கம்பாக்கத்தில் இருக்கும் என் மாமா! மாமி! அவர்களின் மகள் ராதா!

"அவசர காரியமாய்ப் பெங்களூர் போகிறோம்." மாமா சொன்னார். "திரும்பி வரப் பதினைந்து நாளாகும். ராதாவுக்குக் கல்லூரிப் படிப்பு வீணாகிவிடும். பெரம்பூரில் கொண்டு போய் விட்டிருப்போம். ஆனால் அது ரொம்ப தூரம். அதனால்தான்.... வயசு வந்த பொண் பாரு. உன் மனைவிகூடத் தங்கிக்கட்டும்னு அழைச்சிட்டு வந்துட்டேன். ஒண்ணும் தொந்தரவில்லையே!"

"சே... சே...!" என்றேன் அசடு வழிய. நாசுக்குத் தெரியாத மனிதர்.

தூங்கும் நேரம் வந்தது.

இந்தச் சோக(!)க் கதையை எழுதிக்கொண்டிருக்கும் நான், மெல்ல நிமிர்ந்து ஜன்னல் வழியாகப் பார்க்கிறேன்.

கட்டிலில் ராதாவுடன் படுத்திருந்த 'அவள்' நிமிர்ந்து பார்த்து உதட்டைச் சுழித்துச் சிரிக்கிறாள். நான் முகத்தைத் திருப்பிக் கொள்ளுகிறேன்.

நான் நரகத்தில் இருக்கிறேன். பிரம்மச்சாரியாகவே இருப்பதா? அல்லது சாமியாராகி விடுவதா என்ற யோசனையில் இருக்கிறேன்.

தயவுசெய்து என்னைத் தொந்தரவு பண்ணாமல் இருக்கிறீர்களா?

# படித்துப் பாருங்கள்

## Bhavan's Journal Annual Number 1969

பாரதப் பண்புக்குப் பெரும் சேவை புரிந்து வரும் "பவன்ஸ் ஜர்னல்"லின் 1969ம் ஆண்டு மலர் வழக்கம் போலவே ஓர் அறிவுக் களஞ்சியமாக விளங்குகிறது. மறைந்த மாபெரும் ஆசாரியர்களுடையவும், இன்றைய ஆசாரியப் பெருமக்களுடையவும் உபதேசங்கள் முதலிடம் பெறுகின்றன. ஆன்மிகம், கலை, அரசியல் முதலிய பல துறைகளில் சிந்தனையைக் கிளறும் பல முதறிஞர்களின் கட்டுரைகளைக் காண்கிறோம். ஸர்வஸ்ரீ ராஜாஜி, ரங்கநாதானந்தர், கே. சந்தானம், ஸ்ரீபிரகாசா, டி.எல். மேதா, கரன் ஸிங், கே. பி. எஸ். மேனன், தேக் சந்த் போன்றவர்கள் விஷயதானம் செய்திருக்கிறார்கள் எனில், விஷயத்தின் சிறப்புக்குச் சொல்லவும் வேண்டுமோ? ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி நிகழ்த்திய சங்கீத வித்வத் சபைத் தலைமை உரையின் அழகிய ஆங்கில ஆக்கமும் மலருக்கு மணம் ஊட்டுகிறது. 'நவ இந்தியச் சிற்பிகள்' ஐம்பது பேரின் சித்திரங்களும், அவர்களைப் பற்றிய சிறு குறிப்புக்களும் இம்மலரின் அதிமுக்கியமான அம்சம் எனலாம். சத்தியம், அஹிம்சை, ஒற்றுமை, ஒத்துழைப்பு, சமத்துவம், அன்பு, மக்கள் நலன் ஆகிய இலட்சியங்களில் இப்பத்திரிகை மேலும் மேலும் ஈடுபடும் என்று ஆசிரியர் ராமகிருஷ்ணன் கூறுவதற்குத் 'ததாஸ்து' மொழிகிறோம்.

Publishers: Bharatiya Vidya Bhavan, Bombay-7, Price Rs. 1-00.

## Alwar Saints and Acharyas

திருமாலின் பெருமையை, பக்தியின் கனிவை, தமிழின் சிறப்பை ஒருங்கே உணர்த்தி நாலாயிர திவ்யப் பிரபந்தம் தந்துள்ள பன்னிரு ஆழ்வார்கள், மற்றும் வைணவ ஆசாரியர்களில் முக்கியமாக விளங்கும் ஆளவந்தார், ராமாநுஜர், வேதாந்த தேசிகன் ஆகியோருடைய திவ்ய வரலாறுகளையும், அவர்களது உபதேச சாரத்தையும் சக்தி வாய்ந்த நடையில் சுவைபடத் தருகிறார் நூலாசிரியர் கவியோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் அவர்கள். சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிற நூல் என்று சுருக்கமாகச் சொல்லி விடலாம்.

Publishers: Sudhanantha Library, Yoga Samaj, Madras - 20. Rs. 2-50.

# விசேஷ அளிப்பு!

ஸ்டாக் உள்ளவரை




ஒவ்வொரு டின்னிலும் உள்ள போர்ன்விடாவின் அளவு எப்போதும் போல் தான் (450 கிராம் நெட்).

சக்திக்கும் வலிமைக்கும்–மற்றும் தீஞ்சுவைக்கும்
காட்பரீஸ் போர்ன்விடா!

Bensons-2536.Tm



அரசாங்க அலுவலகம் ஒன்றில் தஸ்தாவேஜுகள் வைக்கும் அறை (Record Room) நிரம்பிவிட்டது. ஆகையால் குறிப்பிட்ட காலவரை முடிந்ததும் தஸ்தாவேஜுகளை எரித்துவிட மேலதிகாரியின் உத்தரவு கேட்டு ஒரு குறிப்பு எழுதி வைத்தார்கள். அதற்கு மேலதிகாரி பிறப்பித்த கட்டளை: "சம்மதம், ஆனால் ஒரு நிபந்தனை. தஸ்தாவேஜுகளை எரிப்பதற்கு முன் அவற்றின் நகல்களை எடுத்து வைத்துக் கொள்ளவும்."

ஐ. நா. சபையில் பணியாற்றும் ஸ்ரீ வி. வி. நரசிம்மன் சென்னையில் சமீபத்தில் ஆற்றிய ஓர் உரையில் கேட்டு எழுதியவர் :

- எஸ். சௌரிராஜன்

## கடவுள் அறிவார்!



ஒரு முறை 'எர்னெஸ்ட் ஹெமிங்வே'க்கு ஒருவிநோதமான கடிதம் வந்தது. உறையின் மீது "ஹெமிங்வே" யின் விலாசம் ஆண்டவனுக்குத்தான் தெரியும்" என்று எழுதியிருந்தது.

உடனே 'ஹெமிங்வே' கடிதம் போட்டவருக்குக் கீழ்க்கண்டபடி ஒரு பதில் அனுப்பினார் :

"ஆம், கடவுளுக்குத் தெரிந்துதான் இருக்கிறது!"

ஆதாரம்: "பிரின்ஸஸ்"
தகவல்: வி. சம்பத்குமார்

## இதுவல்லவோ நம்பிக்கை!



"உன் மனைவி மீது உனக்கு நம்பிக்கை உண்டா?"

"இருக்கிறது......"

"உதாரணமாக....?"

"அன்று அவள் துணிக் கடைக்குள் நுழைந்த போது நான் காரின் என்ஜினைக்கூட அணைக்காமல் அவளுக்காகக் காத்திருந்தேனே!"

'வி'

## எது காரணம்?



"உங்களுடைய இந்த நிலைமைக்கு மதுதான் காரணம்" என்றார் டாக்டர்.

"ரொம்ப தாங்ஸ் டாக்டர். நீங்கதான் கரெக்டாச் சொன்னீங்க. மத்தவங்க எல்லாரும் நான் தான் காரணம் என்று சொல்றாங்க."

பேஜண்ட் - "பாலி"



பிறரைக் குற்றம் சாட்ட ஒரு விரலைக் காட்டுகிறீர்கள். அப்போது உங்களுடைய மூன்று விரல்கள் உங்கள் பக்கம் திரும்பியிருப்பதை நினைவுகூருங்கள்.

ஆதாரம்: "கேப்பர்ஸ் வீக்லி"
தகவல்: "ரமணன்"

## இப்படியும் ஓர் அறிவிப்பு!



அமெரிக்காவில் ப்ளாரிடா மாநிலத்தில் செயற்கையாக ஒரு காட்டை ஏற்படுத்தி அதில் நிறைய மிருகங்களை விட்டு வைத்திருக்கிறார்கள்.

காட்டுக்கு வெளியே அறிவிப்பு :–

"உள்ளே போகக் கூடாது. மீறிச் செல்பவர்கள் சாப்பிடப்படுவார்கள்."

"பேஜண்ட்" – "நாயக்,

## 12. பெரியவாளுடன் காந்திஜி




சாந்தமூர்த்தியும் அஹிம்ஸாமூர்த்தியும் சந்தித்த சரித்திர முக்கியமான சம்பவம் 1927ல் நடைபெற்றது. காந்திஜி நிர்மாணத் திட்டப் பிரசார நிமித்தம் தென்னாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்ய வந்திருந்தார். ஏ. ரங்கசாமி அய்யங்கார், சத்தியமூர்த்தி இவர்கள் மூலம் காமகோடி பெரியவாளைப் பற்றிக் கேள்விப்பட்ட காந்திஜி சுவாமிகளைத் தரிசிக்க விரும்பினார். பாலக்காட்டைச் சேர்ந்த நல்லிச்சேரியில் இந்தச் சந்திப்பு நடைபெற்றது.

காந்திஜி சுவாமிகளைப் பார்த்ததும் வணக்கம் தெரிவித்தார். ஸ்வாமிகள் ஸம்ஸ்கிருதத்தில் இரண்டொரு வார்த்தைகள் கூறி காந்திஜியை வரவேற்றார். சுவாமிகள் சம்ஸ்கிருதத்திலும் காந்திஜி ஹிந்தியிலுமாகப் பேசினார்கள். சம்பாஷணை சுமார் ஒரு மணி நேரம் நடைபெற்றது. காஞ்சிப் பெரியவாளின் மேதையைக் கண்டு காந்திஜி வியந்தார்.



சுவாமிகளுடன் காந்திஜி பேசிக் கொண்டிருந்தபோது அஸ்தமித்து விட்டது. ராஜாஜிக்கு காந்திஜியின் இரவு உணவு பற்றிக் கவலை வந்து விட்டது. அஸ்தமனம் ஆனபின் காந்திஜி உணவு அருந்தும் வழக்கம் இல்லை. ஆகவே ராஜாஜி காந்திஜியிடம் உணவு பற்றி நினைவுபடுத்தினார். காந்திஜி "சுவாமிகளுடன் சம்பாஷணை புரிவதே எனக்கு இன்றைய ஆகாரம்" என்று கூறினார். உடனே பெரியவாள் ஒரு பம்பளிஸ் நார்த்தம் பழத்தைக் காந்திஜிக்குக் கொடுத்தார். "இது எனக்கு மிகப் பிரியமான பழம்" என்று சொல்லி காந்திஜி அதை வாங்கிக் கொண்டார். முடிவில் சுவாமிகளிடம் விடைபெற்றுக் கொள்ளும்போது சுவாமிகளின் தரிசனத்தினால் தாம் மிகவும் சிறந்ததொரு பயனை அடைந்ததாகவும், சுவாமிகளின் விருப்பங்களையெல்லாம் மனத்தில் வைத்துத் தம்மால் முடிந்தவரை அவைகளை நிறைவேற்றுவதாகவும் தெரிவித்துக் கொண்டு காந்திஜி சுவாமிகளை வணங்கி விடைபெற்றுக் கொண்டார்.

அன்று மாலை கோயம்புத்தூர் பொதுக்கூட்டத்தில் காந்திஜி பேசிய போது கூட்டத்தில் சிலர், அவர் சுவாமிகளுடன் சம்பாஷணை செய்த விஷயங்களைத் தெரிவிக்கும்படி காந்திஜியைக் கேட்டனர். நாம் பேசியதெல்லாம் அந்தரங்கமான விஷயம் என்றும் ஆகவே அவைகளை வெளியிடுவதற்கில்லை என்றும் காந்திஜி கூறி விட்டார்.

## 13. அண்ணலும் ஆங்கில மேதையும்



காந்திஜி தென்னாப்பிரிக்காவில் இருந்தபோது கோகலே அங்கு வந்திருந்தார். அவரிடமிருந்துதான் முதன் முதலில் ஸ்ரீனிவாச சாஸ்திரியைப் பற்றி காந்திஜி அறிந்திருந்தார். அப்போது கடிதம் மூலம் ஏற்பட்ட தொடர்பு நெருங்கிய நட்பாகப் பிற்காலத்தில் உருவாயிற்று. 1915ல் காந்திஜி தமிழ்நாட்டுக்கு விஜயம் செய்தார். தமக்குத் தென்னாப்பிரிக்காவில் பெரும் உதவியளித்த தியாகிகளான வள்ளியம்மை, நாகப்பன் இவர்களது சொந்த ஊர்களுக்குச் சென்று வர வேண்டும் என்ற நோக்கத்துடனேயே அவர் வந்தார். ஜி. ஏ. நடேசன்தான் சாஸ்திரியாரை முதன் முதலில் காந்திஜிக்கு அறிமுகப்படுத்தியவர். வி. கிருஷ்ணசாமி அய்யர், ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் ஆகியோரும் இச்சமயத்தில் அவருக்கு அறிமுகம் செய்துவைக்கப்பட்டனர். ஸி.பி. தம் வீட்டிற்குக் காந்திஜியை அழைத்து ரூ. 1000 தென்னாப்பிரிக்க இந்தியர் நலன் வேலைக்காக நன்கொடை அளித்தார்.

காந்திஜியுடன் முதல் தமிழ்நாட்டுப் பிரயாணத்தை மேற்கொண்டவர் சாஸ்திரியார்தான். தரங்கம்பாடிக்குச் சென்று ஒரு வாரம் காந்திஜியுடன் அங்கு தங்கியிருந்தார். அப்போதுதான் காந்திஜி அவருடைய ஆங்கில பாஷா ஞானத்தைப் பற்றி நன்கு தெரிந்து கொண்டார்.

இருவரும் கோகலேயைத் தம் குருவாகக் கொண்டவர்கள். "கோகலேயின் வாரிசாக நானே இடம் பெற்றிருக்க வேண்டும். ஆனால் சாஸ்திரியார் அந்த இடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டார். அப்பதவிக்கு அவர் பூரண தகுதியுள்ளவர்தான். ஆகவே நான் மனமார விட்டுக்கொடுக்கிறேன்" என்று காந்திஜி ஒரு சமயம் குறிப்பிட்டிருக்கிறார்.

காந்திஜி தம் 'ஹரிஜன்' பத்திரிகையின் முதல் இதழை சாஸ்திரியாருக்கு அனுப்பிவைத்து அவர் கருத்தைக் கேட்டிருந்தார். சாஸ்திரியார் தம்முடைய அபிப்பிராயத்தைத் தெரிவித்ததுடன் அந்தப் பத்திரிகையில் 27 தப்புகள் இருப்பதையும் கண்டுபிடித்துச் சொன்னார். ஒரே ஆண்டில் பத்து நாட்கள் வித்தியாசத்தில் பிறந்த இவ்விருவரும் நட்பின் இலக்கணமாக வாழ்ந்தவர்கள்.

"நளன்"



# திருவிளையாடல்

-டி. எஸ். தல்லப்பா-



இன்ப நிலவு; முன்னிரவு.

தப்பாச்சி உழுது கொண்டிருந்தான்.

இரவு பகல் பாராமல் சதா உழைத்துக் கொண்டிருக்கும் தப்பாச்சிக்காகவே இரவைப் பகலாக்கிக் கொண்டிருந்தாள் வான்மதி.

வெண்ணிலா ஒளியூடே வெண்கலத்தின் நாதம், டாண்—டாண்—டாண் என்று ஒன்பது முறை ஒலித்து, வியாபித்து, ஓய்ந்தது.

தப்பாச்சி உழுவதை நிறுத்தினான். காளைகளைத் தட்டிக் கொடுத்தான். ஏர்க்காலிலிருந்து விடுபட்டவுடனேயே காளைகள் வீட்டை நோக்கிப் புறப்பட்டன, பள்ளியிலிருந்து வீடு நோக்கி விரையும் மாணவர்களைப் போல. தப்பாச்சியும் மெது நடை போட்டுக் கொண்டிருந்தான்.

யானை போல் கம்பீரமாக நடை போடும் மல்லனைப் போன்ற உடம்பு அன்று தளர் நடை போட்டுக் கொண்டிருந்தது. பாவம்! மல்லிகை போன்ற அவன் இதயத்தை இரண்டு நாட்களாக ஊரார் கசக்கி விட்டுக் கொண்டிருந்தார்கள்.

அத்தை மகள் செல்வியை அவனுக்கு மணம் முடிக்க இருதரப்பாரும் சம்மதித்து, இன்னும் ஒரு வாரத்தில் பரிசம் போடவும் ஏற்பாடாகி யிருந்தது. இதைப் பற்றி ஊரார் மெதுவாக வாயசைக்க ஆரம்பித்திருந்தார்கள்.

''தப்பாச்சி எங்கே! செல்வி எங்கே!'' சிறுசிறு சொற்களாலேயே இருவருக்கும் இடையில் பெரிய மதில் சுவர் போட்டார்கள்.

''தப்பாச்சியின் படிப்பு பூஜ்யம்; செல்வியின் படிப்பு எல்லாவற்றிலும் ஒண்ணும் நம்பர்.''

ஒன்றுடன் [illegible] பூஜ்யம் சேரக் கூடாதா? சேர்ந்தால் பூஜ்யத்துக்கும் மதிப்பு, அந்த ஒன்றுக்கும் முன்னிருந்ததை விடப் பத்து மடங்கு அதிக மதிப்பு.

''ஒத்தைக் கண்ணனுக்குக் கிளிபோல் வளர்ந்த செல்வியைக் கொடுக்க எப்படித்தான் பெத்தவங்களுக்கு மனசு வந்ததோ?''

கிராமத்தின் அருகிலிருக்கும் காடுகளிலிருந்து, என்றோ ஊருக்குள் வந்துவிட்ட ஒரு புலியுடன் போராடி அதைக் கொன்று, போராட்டத்தில் ஒரு கண்ணை இழந்தவன் தப்பாச்சி. வீரனைப் போற்றாமலிருந்தாலும் பரவாயில்லை; தூற்றாமல் இருக்கக் கூடாதா?

தப்பாச்சியின் மனம் ஊராரின் பேச்சுக்கள் என்னும் அம்புகளால் கீறல்கள் பல ஏற்பட்டு அல்லல்பட்டது. ஒரு வழியாக, வீடும் வந்து சேர்ந்தான். சாப்பாட்டை முடித்துக் கொண்டு எதிர் வரிசையில் இருக்கும் அத்தை வீட்டுக்குப் புறப்பட்டான். அத்தையும் மாமனும் அவனை வரவேற்றனர். அவர்களை நோக்கி அவன் கேட்ட முதல் கேள்வி இதுதான்:

''அத்தை! எனக்கும் செல்விக்கும் ஈடு ஜோடு சரிதானு? எனக்கு ஒரு கண்ணில்லே. படிப்பு இல்லே. அளவுக்கு மீறிப்போன ஆஜானுபாகுவான சரீரம். இதையெல்லாம் வச்சி ஊர்க்காரங்க இக மூக இக மூகன்னு பேசிக்கிறாங்களே, சங்கதி தெரியுமா?''

அவன் மாமா ஒரே போடாகப்போட்டார்.

''ராமாயண காலத்திலேயிருந்தே ஊர்க்காரங்க வம்பு பேசிக் குழப்பிக்கிட்டுத்தான் வந்திருக்காங்க. ஊரான் எவனோ சொன்னான்னு மகாலட்சுமியான சீதையைத் தனியாகக் காட்டுக்கு அனுப்பின கதை தெரியு

மில்லே? கண்டவன் பேச்சை யெல்லாம் காதுலே போட்டுக்காதே. நீ போய் நிம்மதி யாத் தூங்கு.''

''செல்வியையும் ஒரு வார்த்தை கேட்டுப் போடறேன், மாமா.''

செல்வியே முன்வந்தாள்.

''எனக்கு நினைவு தெரிந்த நாள் முதலா, உங்களுக்கு நான்தான்; எனக்கு நீங்கள்தான் என்று எல்லோரும் பேசிப் பேசி எனக்கும் அதே மனசிலே பதிஞ்சிருக்கு. வேறே விதமா இதுநாள்வரை நெனச்சதில்லே.''

செல்வி மனம் திறந்து பேசி எல்லோரையும் அயர வைத்தாள். தப்பாச்சி விடை பெற்றுக் கொண்டு வீட்டில் வந்து படுத்தான். தூக்கம் வந்தால்தானே! மனம் அரித்துக் கொண்டிருந்தது.

'பெரியவர்கள் முறை விட்டுப் போகக் கூடாதென்று பழக்கத்துக்கும் சமூகக் கட்டுப்பாட்டுக்கும் அடிமையாகி நிக்கறாங்க. செல்வி ஒரு அப்பாவிப் பொண்ணு. ஆண்டாளு ரங்கநாதரை மனசிலே வச்சாப்பலே, மீரா கிருஷ்ண பரமாத்மாவை மனசிலே வச்சாப்பலே இந்தப் பொண்ணும் சின்ன வயசிலிருந்தே என்னே நினைச்சிக்கிட்டு இருக்குது. மனசு பொருந்தி யிருந்தாலும் மத்த விஷயங்கள் கொஞ்சம் கூடப் பொருந்த மாட்டேங்குதே. அந்த மகமாயிதான் தீர்ப்புச் சொல்லணும். நான் மகமாயியான காளியாத்தாளையே கேட்கிறேன். எது நியாயமோ அவளே சொல்லட்டும்.'

யாரிடமும் சொல்லாமல் நடுநிசியில் காளி கோவிலுக்குப் புறப்பட்டு விட்டான் தப்பாச்சி.

பாழடைந்த அந்தக் காளி கோவிலுக்குக் கதவுகள் இல்லே. யார் வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் தரிசிக்கலாம்.

அம்மன் சந்நிதிக்கெதிரே வேல்களும், திரிசூலங்களும், ஈட்டிகளும் நட்டு வைக்கப்பட்டிருந்தன. எவ்வளவு காலமாக நின்று மோனத் தவம் செய்கின்றனவோ! 'எங்களுக்கும் உயர் நிலை கொடு தாயே!' என்று கேட்பதுபோல் நின்ற நிலையிலேயே குத்திப் பாய்ந்து இது நாள்வரை இறுகப் பிடித்திருந்த பூமியின் மீதுள்ள பற்று விட்டுப் போய், மண்ணின் பிடிப்புத் தளர்ந்து ஆடிக் கொண்டிருந்தன.

நின்றுடும் ஆயுத மேடையின் இரு புறங்களிலும் குதிரை வீரர்கள். மண் குதிரையை நம்பியிருக்கும் எங்களுக்கு நீதான் நல்வழி சொல்ல வேண்டும் என்று குதிரையின் மீதிருந்தவாறே, பன்னெடுங் காலமாக சத்யாக்கிரகம் செய்வது போலிருந்தது.

இந்தக் காளி கோவிலில்தான் தப்பாச்சி தினமும் வந்து வணங்கிச் செல்லுவான். நேற்றுவரை கைகூப்பி வணங்குவதோடு சரி; ஆனால் இன்று கைநீட்டிக் கேட்க வந்திருக்கிறான். நடுநிசியில் வந்திருக்கிறான்.

''காளியாத்தா! எனக்கும் செல்விக்கும் பொருத்தமே இல்லேங்கிற சங்கதி உனக்குத் தெரியாதா? தெரிஞ்சுமா சும்மா யிருக்கிறே?''

காளி மௌனமா யிருந்தாள், என்றும் போல் அப்பொழுதும்.



காளியின் மௌனம் தப்பாச்சியின் கோபத்தைக் கிளறி விட்டது. உணர்ச்சிகள் வெளிக் கிளம்ப ஆரம்பித்தன.

"பொருத்தமில்லாக் கல்யாணம் நடக்கக் கூடாது. நடக்கவே கூடாது. எங்காவது கண்காணாத சீமைக்கு நான் ஓடிப்போயிடறேன். இந்தப் பக்கம் இந்த ஆயுசு இருக்கிறவரை திரும்பிக்கூடப் பார்க்க மாட்டேன். இதைச் சொல்லிட்டுப் போகத்தான் வந்தேன்."

இதுவரை மௌனமாயிருந்த காளி அப்பொழுதும் மௌனமாகத்தான் இருந்தாள். ஆனால் மோனத் தவத்தில் ஆழ்ந்திருந்த அந்தப் பிரதேசத்தில் ஓர் உறுமல் கேட்டது.

ஒரே ஓர் உறுமல்; ஒரே ஒரு விநாடி.

தப்பாச்சி திடுக்கிட்டான். திரும்பி உறுமல் வந்த திக்கில் கண்ணோட்டம் விட்டான். நிலவில் காட்சிகள் யாவும் கண்ணுக்குத் தெரிந்தன. ஆம். அவன் நினைத்தது சரிதான். ஒரு புலி தூரத்தில் அடி அசைந்து வந்து கொண்டிருந்தது. காளி கோவிலை நோக்கித் தான் வந்து கொண்டிருந்தது. தப்பாச்சி கூர்ந்து நோக்கினான். அவனுடைய ஒற்றைக் கண்ணுக்கு யாவும் நன்றாகப் புலப்பட்டன.

அவன் புலியைக் கண்டு மிரண்டுவிடவில்லை. அவனைக் கண்டால் புலிதான் மிரளும். அப்பேர்ப்பட்ட நெடிதுயர்ந்த தடித்த சரீரம். நேருக்கு நேர் வெறும் கையுடனேயே சமர் செய்து புலியைக் கொன்றுவிட, உழைத்து உழைத்து முறுக்கேறின தோள் வலியும், மன உறுதியும் அவனுக்கு இருந்தன. ஏழெட்டு வருஷங்களுக்கு முன் சண்டை விட்டுக் கொன்ற புலியை விட இப்போது வந்து கொண்டிருக்கும் புலி உருவத்தில் சிறியதுதான்.

புலி முன்னேற முன்னேறத் தப்பாச்சியின் மனம் வெகு வேகமாக அடித்துக் கொள்ள ஆரம்பித்து விட்டது. கண்ணில் கூர்மை, உடம்பில் வேகம், மூளையில் சுறுசுறுப்பு, யாவும் ஒரே கணத்தில் தோன்றின.

புலி அடி அசைந்து மெதுவாகத் தேர் போல் வந்து கொண்டிருந்தது. தப்பாச்சியின் மனத்தில் உறுமிக் கொண்டிருந்த வேதனைப் புலி எங்கோ மறைந்து விட்டிருந்தது. எதிரே வரும் வேங்கைப்புலி இடத்தைப் பிடித்துக் கொண்டிருந்தது.

புலி நெருங்கிக் கொண்டிருந்தது. 'வெற்றி எனக்கு மோட்சம் புலிக்கு' என்று கருணை காட்டுமாறு தாயை வேண்டிக் கொண்டான் தனயன். அம்மனிடம் அவன் வைத்த நம்பிக்கைக்கும் மனப்பூர்வ பக்திக்கும் அளவோ எல்லையோ கிடையாது. அதுவே அந்தப் புலிக்கு மோட்சம் கேட்கத் தூண்டியது. அதுவே அவனை நடு நிசியில் கூட்டிக் கொண்டு வந்து அங்கே நிறுத்தியது.

இச்சமயத்தில்தான் புலியோ, தப்பாச்சியோ எதிர்பாராத ஒன்று நடந்தது. புலியும் ஒரு விநாடி ஸ்தம்பித்தது. தப்பாச்சியும் திகைத்து நின்றான்.

ஒரு பிளஷர் கார் வெகு தூரத்தில் மின்னொளி சிந்தி, அதற்கே உரிய காதுக்கினிமையான மெல்லோசையுடன் பாதையில் வந்துகொண்டிருந்தது. புலி சட்டெனப் பாய்ந்து ஒரு புதரில் மறைந்தது. தப்பாச்சியும் காளியின் சிலைக்குப் பின்னால் மறைந்து கொண்டான். அவன் எதிர்பார்க்காத மற்றொன்றும் நடந்தது. கார் சாலையோடு நெடுகப் போய் மறைந்து விடவில்லை. சாலையோரம் இருந்த பாழடைந்த அந்தக் காளி கோவிலுக்கே வந்து நின்றது.

காரிலிருந்து ஐந்து ஆண்களும் ஒரு பெண்ணும் இறங்கினார்கள். தப்பாச்சியின் கண் புலியைவிட்டுச் சற்றே அவர்களைப் பார்த்தது.

அந்த ஐவரில் ஒருவன் அந்த ஊர் பெரிய புள்ளி. ஐம்பது லகாரத்துக்கு மேலே சொத்துள்ள சின்ன மைனர். மற்ற நால்வரும் அவனைச் சுற்றி அலையும் 'நண்பர்கள்'. அந்தப் பெண் யார்? அவளுடைய வாயை ஏன் கட்டியிருக்கிறார்கள்? அவளை ஏன் இக்கோலத்தில் இந்த நேரத்தில் இங்கே கொண்டு வந்தார்கள்? புலியை மறுபடியும் நோக்கினான் தப்பாச்சி. அது அந்தப் புதரிலேயே இருந்தது. மறுபடியும் அந்தப் பெண்ணை உற்று நோக்கினான். அவள் யார்?

'ஐயோ!' என்று அலற வேண்டும்போல் இருந்தது தப்பாச்சிக்கு. அதற்கு இரண்டு காரணங்கள் ஒரே விநாடியில் முளைத்தன.

ஒன்று: அந்தப் புலி மெதுவாக ஊர்ந்து அடி மேல் அடி வைத்துப் பூனைபோல் அவர்கள் நின்று கொண்டிருந்த இடத்துக்கு வெகு சமீபத்தில் ஒரு புதரில் பதுங்கிக் கொண்டது. ஒளி சிந்தும் கண்களால் அக்கூட்டத்தையே பார்த்துக் கொண்டிருந்தது. மற்றொரு காரணம்: அந்தப் பெண் வேறு யாருமல்ல. செல்வி. செல்வியேதான். அவள் அழுது கொண்டிருந்தாள்.

தப்பாச்சி தவித்தான். எல்லாம் அவனுக்குத் தெரிந்து கொண்டுதான் இருந்தது. ஆனால் அவன் என்ன செய்வது? என்ன செய்ய வேண்டும்? என்ன செய்ய முடியும்? இருக்கையை விட்டு அகல வேண்டும், வெளிவர வேண்டும் போலிருந்தது. ஆனால் புலியின் மேலிருந்த கண்ணை வேறு திக்கில் மாற்றிவிட மனமும் எழவில்லை.

புலிக்கும் அவனுக்குமிடையில் ஒரு சிறு கும்பல். புலி இருப்பது அவனுக்குத் தெரியும்; கும்பலுக்குத் தெரியாது. புலிக்குக் கும்பல் இருப்பது தெரியும்; அவன் இருப்பது தெரியாது. கும்பலுக்கோ புலி இருப்பதும் தெரியாது; அவன் இருப்பதும் தெரியாது.

புலிக்கு அவனும் கும்பலும் எதிரிகள்; கும்பலுக்கு அவனும் புலியும் எதிரிகள்; அவனுக்குக் கும்பலும் புலியும் எதிரிகள்.

சிந்திக்க, சிந்திக்கக் குழப்பமும் பயமும் தான் மேலெழுந்தன. தன்னம்பிக்கை முழுக ஆரம்பித்தது.

இந்த உலகையே மறந்து உரையாட ஆரம்பித்தனர் கும்பலில் உள்ளவர்கள்.

"என்ன செல்வி? இப்போ என்ன சொல்லறே?"

"போடா, அறிவுகெட்டவனே."

சம்பாஷணையின் ஆரம்பமே உஷ்ணமாயிருந்தது. தப்பாச்சியின் ரத்தம் கொதித்தது. புலி சற்றே உட்கார்ந்ததுபோல் இருந்தது.

"அண்ணே! அவனைக் கேட்டால் அந்தத் தப்பாச்சித் தடியனைத்தான் சொல்லுவான். அவளை என்ன கேக்கிறது? நம்ம இட்டப்படி

செஞ்சிட்டால் தானா வழிக்கு வந்துதானே ஆகணும்?'' என்று மைனரைப் பார்த்துப் பேசினான் ஒருவன்.

''செல்வி! ஒரே பேச்சுத்தான் எங்கிட்டே! நான் ரொம்பக் கண்டிப்பானவன். உங்கப்பனைக் கேட்டேன். மொறை மாப்பிள்ளை இருக்கிறப்போ வேறே எடம் பார்க்கற வழக்கமில்லேன்னு ஒரே அடியாப் பேசி அடம் பிடிக்கிறான். உன்னையும் ஒருநாள் சந்திக்கக் கேட்டேன். நீயும் காறித் துப்பிவிட்டுப் போயிட்டே. அதனாலேதான் உன்னை இங்கே கடத்திக்கிட்டு வந்தேன். உன்னை என்ன வேணுமானாலும் செய்ய முடியும். கோர்ட்டுக்குப் போனாக்கூடப் பண பலத்தால் ஜெயிச்சிடுவேன். மரியாதையா நான் சொன்னதைக் கேட்டால் உன்னை ஒண்ணும் செய்யாமல் இப்படியே வீட்டுக்குக் கொண்டு போய் விட்டு விடறேன்'' என்றான் மைனர்.

''ஒரு பெண்ணைக் கடத்திக்கிட்டு வர்ற உன் யோக்கியதைக்கு என் கால் செருப்பு கூட மரியாதை செலுத்தாது. என் மச்சானுக்குத் தெரிஞ்சா சுண்டு விரலாலேயே உன்னை அடிச்சுக் கொன்னுடுவாரு.''

''போடி. பைத்தியக்காரி! உன் மச்சானுக்கு யார் பயந்தார்கள்? பயந்தால் இந்தக் காரியம் செய்வேனா? நாளைக்கு உன் மச்சானுக்கு இந்த விசயம் தெரியத்தான் போகுது. அதுக்குள்ளே நீ என்ன ஆயிருப்பியோ எனக்கே தெரியாது. எனக்கு ஆள் பலம், பண பலம், துப்பாக்கி பலம் எல்லாம் இருக்கு. ஜாஸ்தி பேச்சு வேணாம். நான் சொல்ற மாதிரி எழுதிக் கொடு. உன்னை அலுங்காமக் குலுங்காம வீட்டுக்கு அழைத்துப் போய் விட்டு விடுகிறேன்.''

செல்வி விம்மிக் கொண்டிருந்தாள்.

புலி மெதுவாக எழுந்து ஏதோ தயார் செய்து கொண்டிருந்தது. தப்பாச்சியும் பாயத் தயாராக நின்று கொண்டிருந்தான். காளி அம்மனை மனத்தில் ஒரு முறை தியானித்தான். அக்கணமே வரப் பிரசாதம் போல் ஒன்று அவன் கண்ணில் பட்டது. அம்மனுக்கு முன் நட்டு வைக்கப்பட்டிருந்த வேல் கம்பு ஒன்று மண்ணின் பற்றிலிருந்து விடுபட்டுக் கீழே விழுந்தது. 'மகனே! இதை எடுத்துக் கொள்' என்று இறைவன் கூறி அளித்தது போல் இருந்தது. அர்ஜுனனுக்கு மகேசுவரன் பாசுபதம் கொடுப்பது போல் இருந்தது. புலியின் மீதிருந்த பார்வையை அகற்றாமல் நிலத்தோடு நிலமாக ஊர்ந்து வந்து அதைப் பற்றிக் கொண்டு அதே போல் ஊர்ந்து வந்து பின்னுக்குச் சென்று சிலையின் பின் வேலும் கையுமாய் நின்றான் தப்பாச்சி. நல்ல வேளை. அவர்கள் பார்க்கவில்லை. புலியும் தன் நிலையிலேயே இருந்தது.

மைனர் திடீரென்று புதுப் பாணியில் பேச்சைத் தொடர்ந்தான். அந்தப் பாணியில் குழைவு இல்லை; உஷ்ணத்துடன் உறுதி தொனித்தது.

'' செல்வி! உன் அழகுக்கு நான் அடிமை. உன்னை அடையாமல் என்னால் இருக்கவே முடியாது. என் கண் முன்னாலேயே நீ வேறொருவனை மணக்கிறது என்பதும் நடக்க முடியாது; அப்படி நடக்க நான் விடமாட்டேன். எதுக்கும் துணிஞ்சு நிக்கிறேன். தெரியுமா? உன்னைக் கொன்று விடப் போகிறேன். ஆனால் ஒன்று. நீ இறப்பதற்குள்ளான்...'' வீரமாகச் சிரித்தான் மைனர்.



''உனக்கு உடம்பு சரியில்லேன்னு கேள்விப் பட்ட உடனேயே உனக்கு ஆப்பிள் வாங்கலாமா? மலைவாழைப் பழம் வாங்கலாமா? சாத்துக்குடி வாங்கலாமா? என்று யோசித்துக்கொண்டே இங்கு வந்துட்டேன்!''

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

''மிருகம் கொன்றபின் ருசிக்கும். நீ ருசித்தபின் கொல்கிறேன் என்று சொல்கிறாய். நீ மிருகத்தைவிடக் கொடியவன்; கேவலமானவன். உன் கெட்ட எண்ணம் நிறைவேறப் போவதில்லை. என்னை உனக்குக் கீழ்ப்படிய வைக்க, நீயென்ன, உன் முப்பாட்டனே வந்தாலும் முடியாது, முடியாது, முடியாது.''

''மயிலே, மயிலேன்னா இவ்வளவு நேரம் பொறுத்தாச்சு. எனக்கு வேண்டியதை நானே எடுத்துக் கொள்ள வேண்டியதுதான்.'' தன் ஆட்களுக்கு உத்தரவிட்டான்.

மைனர் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் ஒவ்வொன்றும் இடிபோல் தன் மேல் விழுந்ததை உணர்ந்து அதிர்ந்து போனான் தப்பாச்சி. நிஜப் புலி, மனித உருவத்தில் ஒரு காமப் புலி; பணத்துக்காக எதையும் செய்யத் துணிந்த நான்கு நயவஞ்சகப் புலிகள். இவ்வளவு புலிகளையும் ஒரே சமயத்தில் எதிர்க்க வேண்டிய கட்டத்தில் நிற்பதை உணர்ந்தான் தப்பாச்சி. அதே சமயத்தில் நொந்து அழுதுகொண்டிருக்கும் ஒரு பெண் புலியையும் காப்பாற்றியாக வேண்டும்.

வலிமை கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து, பயம் கொஞ்சம் கொஞ்சமாகக் கவ்வ ஆரம்பித்தது. ஏற்கனவே குறைய ஆரம்பித்திருந்த தன்னம்பிக்கை மேலும் வேகமாக குறுகிக் கொண்டிருந்தது. இந்தப் பொறுப்பைத் தன்னால் வெற்றிகரமாக நிறைவேற்ற முடியாதென்று நினைத்தான். மைனரிடம் பாய்ந்தால் புலி என்ன செய்யுமோ? செல்வியை அறைந்து கொன்று விட்டால்...? புலியின் மேல் பாய்ந்தால் மைனரும் அவன் ஆட்களும் செல்வியைக் காரில் கடத்திக் கொண்டு போய்க் கெடுத்து விட்டால்...? துப்பாக்கி வைத்திருப்பவனாயிற்றே! கொஞ்

சம் அவகாசம் கொடுத்தாலும் எடுத்து என்னையும் புலியையும் சேர்த்துக் கொன்று விட்டுப் புலியைச் சுடும்போது தப்பாச்சி மேல் பாய்ந்தது என்று வாதாடித் தப்பித்துக் கொள்வானே! என்னென்னவோ நினைத்து நினைத்துக் குழப்பிக் கொண்டான். மனம் கலங்க, கண் கலங்கிற்று. என்ன செய்வது, என்ன செய்வது என்று விநாடிக்கு நூறு தரம் தன்னையே கேட்டுக் கொண்டான்.

இந்த இக்கட்டான சமயத்தில், உணர்ச்சிகள் ஒன்றோடொன்று முட்டி மோதிப் பாய்ந்தெழும் போது. ரத்த ஓட்டம் காட்டாறு போல் வேகமாக, தன்னால் இனி ஒன்றுமே ஆகாது என்று மனப்பூர்வமாய் உணர்ந்து. 'அம்மா! காளியாத்தா....' என்று எதிரொலி தூரத்தே வெம்புமளவு பலமாகக் கத்திவிட்டான்.

அடுத்த சம்பவங்கள் மின்னல் வேகத்தில் நடந்து முடிந்து விட்டன. பயங்கர உறுமலுடன் புலி பாய்ந்தே விட்டது மைனரின் மேல்;

புலியை நோக்கிப் புயல் வேகத்தில் வந்து வேல் கம்பைப் பாய்ச்சினான் தப்பாச்சி.

உடலில் பாய்ந்த வேல் கம்புடன் மரண ஓலம் எழுப்பிக் கொண்டே கீழே விழுந்தது புலி. இருபது அடி தூரத்துக்கு இப்படியும் அப்படியுமாகப் புரண்டு கொண்டிருந்தது.

மைனர் பேயறைந்தாற் போல் காணப்பட்டான். அவனுக்கும் மரணத்துக்கும் ஓர் அங்குல இடைவெளிதானே இருந்தது. சற்றுமுன், தப்பாச்சி கடுகளவு தாமதித்திருந்தாலும் அவன் உடல் எப்போதோ சில்லிட்டிருக்குமே!

செல்வியின் முகம் தப்பாச்சியைக் கண்டதால் சற்றே மலர்ந்து காணப்பட்டது.

முகஸ்துதி செய்தே பிழைத்து வந்த சுய காரியப் புலிகள் நால்வரும் முள்ளும் கல்லும் பாராமல் ஆளுக்கொருவராய்த் தப்பித்தோம், பிழைத்தோம் என்று ஓடியே விட்டனர்.

தப்பாச்சிக்கு என்ன நடந்தது என்பதே அப்போதுதான் கொஞ்சம் கொஞ்சமாக விளங்க ஆரம்பித்தது. பீதியின் பின் குழம்பித் தவித்துக் கொண்டே காளியம்மனின் பேர் சொல்லி அழைத்தது வரை நன்கு உணர்ந்திருந்தான். மற்றவை எல்லாம் உணர்ச்சியில் செய்துவிட்டு, சிறிது தாமதமாக உணர ஆரம்பித்தான்.

புலியின் முனகல் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து கொண்டே வந்தது. உடலை ஊடுருவி மறு பக்கம் வந்திருக்கும் வேல் கம்புடன் படுத்த நிலையிலிருக்கும் புலியைப் பார்த்தான் தப்பாச்சி. அதன் கண்கள் மூடி மூடித் திறந்தவண்ணம் இருந்தன. பரிதாபமாக வாயைத் திறந்து மூடிக் காண்பித்தது. உடலைப்பிரிந்து உயிர் ஏகும் தருணம் வந்து விட்டது என்று நினைத்தான்.

ஆனால்...?

புலி சாகப் போகும் நேரத்திலும் உடம்பில் ஆயுதம் பாய்ந்த நிலையிலும், தன் பலத்தையெல்லாம் திரட்டி ஒரு தடவை புரண்டு கொடுத்து ஒரு சிறு பாய்ச்சலைக் காட்டியே விட்டது. முதல் தடவை மைனரின்மேல் பாய்ந்தபோது ஓர் அங்குல இடைவெளியில் இலக்கைத் தொடாமலேயே மரண ஓலத்துடன் விழும்படி ஆயிற்று. ஆனால் இந்தத் தடவை, சிறு பாய்ச்சலானாலும் இலக்குத் தவறவில்லை. சமீபத்தில் நின்றிருந்த செல்வியின் மேல் வாய் போட்டது. அவளுடைய கையைப் பாயத்தான் அதற்குச் சக்தி இருந்தது போலும். கையைக் கடித்து விட்டது. 'ஓ'வென்று பயங்கர ஓலம் எழுப்பினாள் செல்வி.

எதிர்பாராத விதமாக மறு வேகத்தில் காரியம் நடந்துவிட்டபடியால் தப்பாச்சியால் உடனடியாக ஒன்றும் செய்ய முடியவில்லை. கையைக் கடித்துக் குதறியபின்தான் புலியைப் பின்புறமாக இழுத்து அமுக்கிக் குரல் வளையை நசுக்கினான். புலியும் நிரந்தரமாகக் கண்ணை மூடியது.

இது நடந்து ஆறு மாதங்களுக்குப் பிறகு—

''என்னை மன்னித்துவிடு தப்பாச்சி!'' என்று காலைப் பிடித்துக் கொண்டான் மைனர்.

''கடவுளே உன்னை மன்னிக்க மரணம் இல்லாமெக் காப்பாத்திட்டாரு. இனிமேல் நான் செய்யறதுக்கு என்ன இருக்கு? நான் ஏதாவது செய்வேன்னு அஞ்சறியா? காளியாத்தாளே பார்த்து ஒரு மனுசனைக் காப்பாத்திட்டபின், நீ ஏதோ நல்லது செஞ்சிருக்கே, இல்லே, நல்லது செய்யப் போறேன்னு அர்த்தம். உம்மேலே எனக்குக் கோபமில்லே. என்னைப் பார்க்கும்போதெல்லாம் மன்னித்து விடுன்னு காலைப் பிடிக்கிற வழக்கத்தை விட்டு விடு.''

''உன் மனசு நல்ல மனசு தப்பாச்சி. அநியாயம் செஞ்சது நான். ஆனால் தண்டனை அநுபவிக்கிறது செல்வி. அவளோட இடது கையெ புலி குதறிட்டுச் செத்ததே. எல்லாத்துக்கும் நான்தான் காரணம்.''

''தப்பு, மைனர்! நீ நினைக்கிறது தப்பு. செல்விக்கு ஒரு கை போற மாதிரி ஏற்பாடு செஞ்சி எனக்குக் கல்யாணம் பண்ணி வைக்கச் சாமியா செஞ்ச ஏற்பாடு. ஒத்தைக் கண்ணனுக்கு ஒரு கை போன செல்வி சரியான ஜோடி. பொருத்தமில்லாத ஜோடியானு நான் ஓடியே போயிடுவேன்னு காளியாத்தாகிட்டே சபதம் செஞ்சேன். உனக்கென்ன தெரியும், அதைப் பத்தி?''

''தப்பாச்சி! காளியாத்தா — நீ தினமும் போய்க் கும்பிடறியே, அந்தக் காளியாத்தா— சூனியாத்தாளாயிருந்தாலும் சக்தி வாய்ந்த சாமி. என்ன பணம் செலவானாலும் சரி. புதுக் கட்டடம் கட்டிக் கும்பாபிஷேகம் எடுக்கிறேன். இது எங்கப்பன் மேலாணை.''

''பாத்தியா, பாத்தியா? இப்பத்தான் எனக்கு விளங்குது. உன் மூலமா ஒரு நல்ல கோயில் கட்டிக்கணும்னு நம்ம காளியாத்தா 'ப்ளான்' போட்டு, உன்னை அக்கிரமம் செய்ய வச்சா. பின்னாலே தன் புலியையே அனுப்பி வச்சா...காளியம்மா! உன் விளையாட்டே விளையாட்டு'' என்று ஆனந்தம் பொங்கக் கடவுள் மகிமை பேசினான் தப்பாச்சி.

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan
Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-31
Managing Editor: T. Sadasivam

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon